# Sri Rama Das

— OR —

"DEVOTION IS SUPREME BLISS."

## A RELIGIOUS TAMIL DRAMA

By

N. VISWANATHAN,
Y. M. L. A.
(SRI KUMARA GANA SABHA, TANJORE.)

Author of
VEERASIMHAN, RAJASEKARA, etc.



*With a foreword*
*By*

M. R. Ry. K. S. Ramaswami Sastri Avl.,
B. A., B. L.
District & Sessions Judge,
RAMNAD.

 *Price Annas* 12.

1929

"Pammal Lodge"
George Town, Madras,
8th March, 1929.

Dear Sir,

Many thanks for the preliminary copy of **"RAMADAS,"** you so kindly sent me. It is with great pleasure that I went through it. I like the language in which it is written, being simple and elegant. The scenes are well arranged, the characterization well maintained. I wish you greater success in your future attempts.

Once again thanking you,

I remain
Yours sincerely,
P. Sambandam.

ௐ

# ஸ்ரீ இராமதாஸர்

—அல்லது—

## ''பக்தியே பரமானந்தம்''

இந்த தமிழ் நாடகம்

— தஞ்சை —

**N. விஸ்வநாத அய்யர்**

அவர்களால் இயற்றப்பட்டது.



இந்த நூலாசிரியரால் தொகுக்கப்பட்ட ஏனைய, நாடகங்கள்.
ராஜசேகரன் அல்லது ''மூன்று தேசப்ரஷ்டர்கள்''
வீரஸிம்ஹன் அல்லது ''மெய்க்காதலின் இரகசியம்''
முதலியன.

K. S. ராமஸ்வாமி ஸாஸ்திரி அவர்கள் B. A., B. L.,
முகவுரையுடன் கூடியது.



தஞ்சை
''பூர்ணனந்தா'' அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1929.

 [விலை அணு 12.

Inscribed

—TO—

The Memory of My Beloved Brother

N. Ramaswami Ayyar

A

Devotee of Sri Bala Skantha.

# FOREWORD

It gives me great pleasure to write this brief foreword to Mr. N. Viswanathan's bright and sweet Drama entitled "SRI RAMADAS." The Author has already made his debut into the world of letters and won his early laurels. He is not only a playwright, but is an actor of talent as well. He thus knows by direct and immediate experience, the details of stage technique. It is only, when a man combines the fine arts of presentation and representation, that we can have that union or artistry of words and power of arresting attention which is the secret of dramatic success.

The Indians of today are persons to whom Tennyson's excellent and beautiful lines may be aptly applied as a fine and fitting description.

> " We are the ancients of the world
> And in the morning of the times "

They are prepared and eager to be the best modern of moderns and yet Indian to the core of their being. This new pride in their Indianness is the fairest flower of Indian patriotism and the finest fruit of the Indian renaissance. The Indians are rooted in the past and full of active and strenuous life in the present and front with glad and confident eyes the rising dawn of the future.

How is this new spirit in India fed and fostered?

> "Tell me where is this passion bred,
> Or in the heart, or in the head?
> How begot, how nourished? Reply, Reply!
> It is engendered in the heart with freedom fed,"

It is one of the eternal lessons taught by God to Man that we cannot win or keep or deserve outer freedom unless we win and keep the rich inner freedom of the spirit India has been not only the home of beauty and romance but has also been the temple of blessedness and holiness. She must hence preserve the white purity of her soul while coming into her own in the realm of outer life. Such freedom of the spirit is achieved by the subjection of temporal desires to Spiritual love. It is here that the play is so valuable to all and to Indians in particular, because, in the words of the Author, "பக்தியே பரமானந்தம்." (Devotion is supreme bliss)

Madura,
10th, Mar. 29.

K. S. Ramaswamy Sastri.

# Preface.

Struck by the sublime devotion of SRI RAMADAS alias GOPPANNA of Badrajhalam, inspired by the sources to which I had access and encouraged by my Stage experienee for a pretty long period, I have dramatised this story with the hope that it will receive the approbation of the reading public.

To beautify the play I have introduced some new characters and to suit the Tamil Stage, I have taken special care to avoid Hindustani epithets as far as possible.

My heartfelt thanks are due to M. R. Ry., Rao Bahadur, P. SAMBANDA MUDALIAR Avl., for his kind patronage and encouragement. My thanks are no less due to my esteemed friend Mr. V SESHADRI, a Tamil scholar. But for his valuable assistance, I could not have ventured to publish my plays.

Before enacting this or any other drama of mine, my previous permission must be obtained. Societies,-Amateur and professionl-will kindly note that as the law stands at present Breach of Copy Right in a Drama is a criminal offence.

N. Viswanathan.

*All communications to—*

N. Viswanathan, c/o

The Secretary, Y. M. L. A.

SRI KUMARA GANA SABHA,

Tanjore.

## நாடக பாத்திரங்கள்.

ஸ்ரீ இராமர். இலக்ஷ்மணர். ஸீதாதேவி.

| | | |
|---|---|---|
| தானேஷா. | ... | ஐதராபாத்து அரசர். |
| அக்கன்ன. மாதன்ன. | ... | ஸகோதரர்கள்; தானேஷாவின் மந்திரிகள். |
| கோபன்ன. | ... | ஸ்ரீ இராமதாஸர்; மந்திரிகளின் மருமகன்; பத்திராஜலம் தாசில்தார். |
| கபீர்தாஸ். | ... | கோபன்னவின் குருநாதன். |
| சுந்தரம். | ... | கோபன்னவின் மைந்தன். |
| மோகன்தாஸ். | ... | கோபன்னவின் நண்பன்; ஓர் பிரபு. |
| காராலி. | ... | தானேஷாவின் தளகர்த்தர். |
| ஜயதேவர். | ... | தானேஷாவின் நிதித்தலைவர். |
| திம்மாஜிராவ். | ... | பத்திராஜலம் தாலூக்காக் கச்சேரித் தலைமைக் குமாஸ்தா. |
| சுப்பையர். | ... | பத்திராஜலம் தாலூக்காக் கச்சேரியில் ஓர் குமாஸ்தா. |
| கிருஷ்ணமாச்சாரியார். | ... | ஓர் புரோகிதர். |
| கோவிந்தன். | ... | பத்திராஜலம் தாலூக்காக் கச்சேரியில் ஓர் சேவகன். |
| இராம்ஸேட். | ... | மதனபல்லியில் வசிக்கும் ஓர் பிரபு. |
| அப்ஸல்கான் ஷாஜிகான். | ... | ஐதராபாத்து சிறைச்சாலை வீரர்கள். |
| யசோதவர்மர். | ... | ஓர் பிரபல சிற்ப சாஸ்திரி. |
| ஸ்ரீனிவாஸஅய்யர். | ... | கிருஷ்ணபல்லி கர்ணம். |
| ஸரஸ்வதி. | ... | கோபன்னவின் மனைவி. |
| ஷேரீன். ரௌஸினரா | ... | தானேஷாவின் பத்தினிகள். |

இன்னும்:—நடனமாதர்கள், சேவகர்கள், வீரர்கள், சாதுக்கள். குடியானவன் முதலானோர்.

நிகழ்விடம்:—நெல்கொண்டா பல்லியிலும், ஐதராபாத்திலும் பத்திராஜலத்திலுமாம்.

உ

பாலஸ்கந்தன் துணை.

# ஸ்ரீ இராமதாஸர்

(அல்லது)

## "பக்தியே பரமானந்தம்"

---

## அங்கம் 1. காக்ஷி 1.

---

இடம்: கோபன்னுவின் பூஜாக்கிரகம். காலம்: முற்பகல்.

(சரஸ்வதி ஸ்ரீ இராமபடத்தின் முன்னர் அமர்ந்து புஷ்ப மாலைகளைத் தொடுத்துக்கொண்டிருக்கின்ருள்.)

**சரஸ்.** இனி என் பிராணநாதருக்குவேண்டிய பூஜைப் பாத்திரங்களை எடுத்துவைப்போம். பிக்ஷைக்குச்சென்றஅவரும், என் அருமைக்குழந்தை சுந்தரமும் வரும்நேரமாயிற்று (குத்துவிளக்கை ஏற்றிவைத்துப் பூஜைப்பாத்திர முதலியவைகளை எடுத்துவைக்கிருள். கோபன்னு ஸ்ரீஇராம மகிமைகளைப் பாடிய வண்ணம் பிரவேசிக்க, சுந்தரம் பிக்ஷா பாத்திரத்துடன் பிரவேசித்து, பாத்திரத்தைப் படத்தின் முன் வைத்தல்.)

**கோப.** ஸீதாகாந்தஸ்மரணே!

**சரஸ்.** ஜய ஜய இராம்!

**சுந்த.** ஜய ஜய இராம்!

(கோபன்னு நமஸ்கரித்து, வருத்தத்துடன் ஓர் மூலையில் அமருகின்றனர்)

**சரஸ்.** (அவரைவணங்கி) அன்பரே! தங்களுடைய திவ்விய முகமானது, என்றுமிலாதபடி இன்று மாறுபட்டிருப்பதை நோக்க அடியாளின்மனம் வருந்துகின்றதே.

**கோப.** சரஸ்வதி! என்னுடைய உடல், பொருள், ஆவி, இம்மூன்றையும் ஸ்ரீஇராமனுக்குத் தத்தம்செய்தும், அப்பெரு

மானுக்கு என்மீது இன்னும் கிருபை உண்டாகவில்லையே! என் ஐயனே! மெய்யனே! துய்யனே! உம்முடைய திவ்ய தரிசனத்தை என்று காண்பேன்?—பெண்ணே! இவ்வூரில் நான் இனி பிக்ஷை எடுப்பதை நிறுத்திவிடுதலே உசிதமென நினைக்கின்றேன்.

**சரஸ்.** பிராணேசா! தங்கள் மனம் கலங்குவதின் காரணமென்ன?

**சுந்த.** அம்மா! பலர் அப்பாவைப் பார்த்து, இவன் தாய் தந்தையர்கள் தேடிவைத்தபொருளை வீணுகச்செலவு செய்துவிட்டுத்தீவட்டிபோல, வெட்கமில்லாமல், உள்ளூரிலேயே பிக்ஷை எடுக்க வந்தனனேயென்றும், இவனுக்கு ஒருவரும் உதவி செய்யாதீர்கள் எனவும் சொன்னுர்கள் அம்மா. அதனுல்தான் அப்பா வருந்துகிறுர்.

**கோப.** ஆ! குழந்தாய்! நான் இவைகளையெல்லாம் பொறுத்தும், ஸ்ரீஇராகவனுக்கு என்னிடம் இரக்கமில்லையே, என்றுதான் வருந்துகிறேன். ஹே ஸ்ரீ இராமா! பரந்தாமா! தமது கிருபைதான் எனக்குவேண்டும். நீரே எனது தாய் தந்தை. உம்மையன்றி எனக்கு வேறு தெய்வமில்லை. உம்மை அடையும் மார்க்கத்தை, எனக்கருளும் பொருட்டுத் தாம் எனக்கு ஒரு சத்குருவைக்காட்டலாகாதா! பக்தர்க்கனுகூலா! அபயம்! அபயம்!!—இதென்ன என் வலக்கண் துடிக்கின்றது. இதுவும் நன்மையே. பெண்ணே! இனி யான் பூஜையைச் செய்து முடிக்கின்றேன். நீ இப்பிக்ஷையை எடுத்துச் சென்று சமையல் செய்வாய்.

**சரஸ்.** அப்படியே. (பிக்ஷாபாத்திரத்தை உள்ளே எடுத்துச் செல்கிறுள்.)

**கோப.** (பூஜைமுடித்து, கற்பூரத்தைக்கொளுத்தி, சுவாமிமுன் வைத்துக்கரங்குவித்து) ஓ! தேவ தேவா! தங்களுக்கு என்மீது எப்பொழுது அன்பு உண்டாகப்போகின்றது? உம்மையடைய இரவும் பகலும் நான் துதித்தும், ஏழையாம் என்மீது உமக்கு வர்மமா? பிரபோ! உம்முடைய சேவையைக்கண்டு களிக்கும் வழியை, அடியேனுக்கு அறிவிக்கத் தகுந்த அன்பரும், பக்தருமான, பெரியாரை யான் என்று அடைவேன்? ஹே தீன தயாளா! தம்முடைய திவ்ய ஸ்வரூபத்தை நான் என்று காண்பேனே, அன்றுதான் புனிதமடைவேன்.

**சுந்த.** அப்பா! யாரோ ஒருவர் வருகின்றுர்.

(மோகன்தாஸ் பிரவேசம்.)

**கோப.** மோகன்தாஸரே! வரவேண்டும். உம்மைப்பார்த்து பல மாதங்களாயினவே. ஏழைமீது கிருபைவைத்து என் குடிசைக்கு வந்ததைப்பற்றி மிகவும் சந்தோஷம். உட்காருங்கள். யாவரும் க்ஷேமந்தானே ?

**மோக.** க்ஷேமந்தான். கோபன்ன! உன்னைப்பார்த்தால் அடையாளமே தெரியவில்லையே! தவிர, வேஷங்களும் வரவர பலமாகப் போடுகின்றாய். இதெல்லாம் என்ன!

**கோப.** இதில் என்னபுதுமை? உத்தியோகசாலைக்குச் செல்லும் ஒருவர், தம் உத்தியோகத்திற்குத் தக்க உடைகளை அணிந்து செல்வதுபோன்று, நான் ஏற்றுக்கொண்ட கைங்கரியத்திற்குத் தக்கபடி இவ்வேஷத்தைக் கொண்டுள்ளேன்.

**மோக.** பேஷ்! வெகுபேஷ்!! நண்பா! பலசமயங்களில், நீ உன் புதல்வனுடன் பிக்ஷை எடுத்துச்செல்வதை என் ஐந்தாவது உப்பரிகையின்மீதிருந்து நான்பார்த்தேன். அடடா! அச்சமயம் என்மனதிலே எவ்வாறு இருந்தது தெரியுமா! கோபன்ன! நீ செய்யும் செய்கையானது எங்களுக்கல்லவோ, அவமானத்தை உண்டாக்குகிறது. உன் தாய்தந்தையர்கள் இருந்த நிலைமை என்ன! அவர்களுடைய செல்வாக்கென்ன! ஆஹா! அவ்வளவு செல்வத்தையும் வீண்சோம்பேறிகளாய்த்திரியும் வேஷதாரிகளுக்கு அளித்தும், உபயோகமற்ற கோயில் கட்டுவதற்குச் செலவழித்தும், நாசம் செய்துவிட்டு, முடிவில் கட்டுவதற்குக் கந்தையும், குடிப்பதற்குக் கூழுங்கூட இல்லாதவனாய்த் தவிக்கின்றனையே! கற்றறிந்த நீயே இவ்விதம் செய்தால், ஏனையோர் எதைத்தான் செய்யார்! அறிவாளியாகிய நீ, கபடசந்நியாசிகள் வணங்கும், கண்ணுக்குத்தெரியாத கடவுளை, உண்மையென எண்ணி இன்னமும் நம்பி வீண்மோசம் போகவேண்டாம். கடவுளாவது கிடவுளாவது. யாவும் சுத்தப்பொய்.

**கோப.** இராம! இராம!! கடவுள் இல்லையென்று நினைக்கிறீர்! அந்தோ! உம்முடைய நிலைமை மிகவும் வருந்தத்தக்கதே.

**மோக.** நண்பா! கடவுள் ஒருவர் உண்டு என்று நீ தெரிவித்தால் அதனை நான் எப்படி நம்புவது? பாவம்! கண்ணுக்குப் புலப்படாத ஏதோ ஒன்றை நினைத்துக்கொண்டு எதையோ கண்டவன்போல ஏன் இவ்வித ஜாலங்கள் செய்கிறாய். கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பதனை எனக்கு நீ விளங்கச் சொல்லுவாயா ?

**கோப.** அன்பரே! நீர் விரும்பும் விஷயம் விரித்து உரைப்பின் மிகப்பெருகும். ஏதோ எனது சிற்றறிவுக்குத் தோன்றியதைத் தெரிவிக்கின்றேன். நண்பரே! கண்ணுக்குப் புலனுகா விஷயங்களை, அநுமானப் பிரமாணத்தாலும், வேத ஆகமப் பிரமாணத்தாலும், கண்டு அறியலாம். இலைகளின் அசைவைக் கொண்டு காற்றின் இருப்பையும், புகையைக்கொண்டு தீயின் இருப்பையும் அறிதற்போல், காணப்படும் ஜகத்தைக்கண்டு அதைப்படைத்த கர்த்தர் ஒருவர் இருத்தல் வேண்டுமென்று நாம் அறியலாம். ஏனெனில் இவ்வுலகம் உயிர் அற்றதாதலின், இது தானுகவே உற்பத்தியாயிருக்கமுடியாது. மேலும் காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சர்யம், என்னும் பாதகங்களுக்குட்பட்ட ஜீவர்களால் இவ்வுலகம் படைக்கப்பட்டிருக்கமுடியாது. தவிர வேத ஆகமங்களும், சர்வேஸ்வரனுடைய உண்மைக்கு உறுதிகூறுகின்றன. இது போதாதா?

**மோக.** நீ தெரிவித்தபடி கடவுள் ஒருவர் உண்டு என்பதை நான் ஒருவாறு ஒப்புக்கொள்கின்றேன். இனி சர்வேஸ்வரன் இருக்குமிடம் யாது?

**கோப.** நண்பா! அவர் இல்லாத இடம் ஒன்றும் இல்லை. அவர், உருவாகியும், அருவாகியும், அணுவாகியும், மகத்தாகியும், இவ்வுலகத்தின்கண் உள்ள, சகல ஆன்மாக்களிடத்தும் வியாபித்திருக்கின்றனர்.

**மோக.** அப்படியாயின், அக்கடவுள் என்னிடத்தும் இருக்கின்றனரோ! நண்பா! அதனை நான் எப்படி அறிதல்கூடும்? தயைசெய்யவேண்டும்.

**கோப.** மோகன்! **தன்னை** அறிந்தால் **தலைவனை** அறியலாம் என்பது உலகசித்தாந்தம். திருஷ்டாந்தமாக, நமது சித்தத்தைப் பாலுக்கு ஒப்பிடுவோம். பாலைக்காய்ச்சிப் பரிசுத்தமாக்கி, பிரையிட்டு, தயிராக்கி, கடைந்து, வெண்ணெய் எடுத்து, உருக்கி, பின்னர் நெய்யாக்குதற்போல, நம் சித்தத்தை, பலனை எதிர் பாராது செய்யும் சத்கருமத்தினல் தூய்மையாக்கி, உத்தம குருநாதன் உபதேசத்தால் பற்றறச்செய்து, ஆன்மஞான விசாரணை செய்து, தத்துவத்தை அறிந்து, அதனிடையே நிலைக்க, தன்னை அறிந்து, பின்னர் தலைவனை அறியலாம்.

**மோக.** (பக்தியுடன்) தாங்கள் சொல்வது சுலபமாகவே இருக்கின்றது. ஆனல் செய்வது........

**கோப.** கடினந்தான். நண்பரே! எனினும் முயற்சி திரு வினையளிக்கும். மோகன்! இனியுமா சந்தேகம். வீணாகக் கடவுளை மறந்து, பேராசையாகிய பேய்பிடித்தாட்ட, துக்கத்துக்கிடமாகிய, மண், பெண், பொன், முதலியவற்றைப் பெரும் பொருளெனக்கருதி, கடவுளின் முன்னிலையில் அசுத்தமடைந்து, மகா அபராதியாகி “அடாது செய்வர் படாதுபடுவர்” என்றபடி அதோகதியிலாழ்ந்து கெட்டு, இயற்கையிலேயே தோஷமில்லாத மாசற்ற கண்ணன், மணிவண்ணன், சாதுஜனர்த்தனனான ஸ்ரீ இராமனை இகழாதீர். இன்று முதலாவது தெய்வநிந்தனையை விட்டு, ஸ்ரீ இராமஸ்மரணையைத் தவிர மற்றைய அனுஷ்டானங்களைவிட்டு, அவருடைய கல்யாணகுணங்களில் ஈடுபட்டு, பிறப்பு, இறப்புமின்றி, பேரின்ப சுகத்தையடைய வழிதேடுவீர். உலகவாழ்க்கையை வெறுப்பீர். பிரியரே! இப்பொழுது நீர் இருக்கும்படியான நிலைமையை யோசித்துப்பாரும் நீர் இப்போது அடைந்துள்ளவைகள் எல்லாவற்றையும் பிறந்தபொழுது கொண்டுவந்தீரா? அல்லது இறக்கும்பொழுது எடுத்தேகுவீரா? இல்லை. ஒருபோதுமில்லை. இப்பொய்யான தேகத்தைவிட்டு ஜீவன் பிரியுங்கால், தாம் எங்கே? தம்மனிதர் எங்கே? பெண்கள் எங்கே? பொன்கள் எங்கே? தந்திரிகள் எங்கே? மைந்தர்கள் எங்கே? பட்டுவஸ்திரங்கள் எங்கே? கட்டில்மெத்தைகள் எங்கே? பொன்மணிகள் எங்கே? நன்வனிதைகள் எங்கே? ஒன்றும் நம்முடன் கூடவருவதில்லை. ஆயினும் நாம்செய்த பாபமென்கிற ஒரு பெரிய மூட்டையும், புண்ணியம் என்கிற சிறிய முடியுமே நம்மைத் தொடர்கின்றன. ஆதலின் நீர் எவ்விதத்திலாகிலும், சத்கருமங்களைச் செய்ய எண்ணி, எல்லாம் வல்ல ஜகத்ரக்ஷகராகிய ஸ்ரீ இராமனையே சரணடைந்து, அவரை வழிபடுவதிலேயே, உமது உடல், பொருள், ஆவி, இவைகளைத் தத்தம் செய்தால், சோதனைக்காக உண்டாக்கப்பட்ட இவ்வுடலத்தைவிட்டு, மெய்ச்சடலத்தில் புகுந்து நித்யானந்தவாழ்வையடையலாம்.

**மோக.** (நமஸ்கரித்து எழுந்து) நண்பரே! நான் அறிவற்று சொன்ன சொற்களை க்ஷமித்தருளல்வேண்டும். இவ்வுலக ஆசையில் உழன்ற என்னை, நல்வழிக்குத் திரும்புமாறு போதித்த தங்களுக்கு நான் என்ன பிரதியுபகாரம் செய்யப் போகின்றேன். இன்றே நான் தன்யனானேன். ஆஹா! உழுகிறகாலத்தில் ஊர் திரிந்து விட்டு, அறுக்கிற காலத்தில் அரிவாளை எடுத்து வருவதேபோல், இது நாள் பரியந்தம் என் காலத்தை வீணே கழித்து விட்டேனே? ஆயினும் இதற்கு உற்றவழி தாங்களே தெரிவிக்கவேண்டும்.

**கோப.** நண்பரே? உமக்கு இதுவரையினும் இல்லாத அனுதாபம், இப்பொழுது உண்டானதே ஸ்ரீஇராமபிரானின் திருவுளம்போலும். தாம் ஒன்று செய்யும். ஓர் சத்குருவைக் கண்டடைந்து, அவரிடத்தில் உமது குறைகளைத் தெரிவித்து, பின்னர் நல்லுபதேசம் பெற்று நல்வழியடையும்.

**மோக.** பக்தரே! பூவோடு சேர்ந்த நாரும் மணம் அடைந்ததுபோல, தங்களது சேர்க்கையினுல் நானும் நல்வழிப் பட்டேன். கைம்மாறு கருதாது பொழியும் கார்மேகம் போன்று தாம் எனக்குச்செய்த உபதேசம், என்னை நல்வழிசேர்க்கும். இதற்கு யான் என்ன பதில் உதவிசெய்யப் போகின்றேன்.

**கோப.** அன்பரே! மேகமானது, கதிரவனின் வெப்பத்தால், கடலின் உப்புநீரையுண்டு, பின்னர் உப்பைமாற்றி அதனை சுத்தத் தண்ணீராக்கிப் பொழிய, அந்நீர் மீளவும், கடலில்வீழ்ந்து உப்பு ஜலமாகிக் கெடுவதேபோன்று, ஏதோ, தசரதகுமாரன் அருளினுல், நாஸ்திக மதக்கொள்கையை விட்டு, நல்வழிக்குத் திரும்பிய நீர், மீளவும் உலக சேஷ்டைக்குட்பட்டு, முன்னிருந்த நாஸ்தீக மதத்தில் வீழ்ந்து கெடாமல், வைராக்கியத்தோடு ஈசனை வணங்குவீரேல், அதுவே தாங்கள் எனக்குச் செய்யும் பிரதியுபகாரம்.

**மோக.** அன்பரே! இனி நான் காலங் கழிக்கும் வழியை அறிந்துகொண்டேன். கோபன்னு! நான் சென்று வருகின்றேன். ஆயினும் நான்அடிக்கடி, உம்மிடம்வர அனுமதியளிக்கவேண்டும். போய் வருகின்றேன்.

**கோப.** மிகவும் சந்தோஷம். ஸ்ரீஇராமபிரானின் கருணை உமக்கு உண்டாவதாக. (மோகன்தாஸ் செல்ல சாஸ்வதி பிரவேசம்)

**சரஸ்.** பிராணபதி! போஜனம் சித்தமாய்விட்டது.

**கோப.** இதோ வெளியில் சென்று ஓர் அதிதியை.........

**கபீர்.** (வாயிலிலிருந்துகொண்டே) பவதி பிக்ஷாந்தேகி— ஸ்ரீஸீதா லக்ஷ்மண, பரதசத்ருக்கன, ஹனுமத் சமேத ஸ்ரீ இராம சந்திரமூர்த்தி சகாயம்.

**கோப.** பெண்ணே! யாரோ ஒருமகான், நமது வாயிலிற் வந்திருக்கின்றூர் போலும். போய் அழைத்து வருகின்றேன்.

(வாயிலின் அருகில் சென்றுபார்த்து) ஓ! கபீர்தாஸரா! வரவேண்டும்! வரவேண்டும்!! (கபீர்தாஸ் வருதல்) ஆ! கருணை ததும்பும் இவருடைய முகத்தின் காந்திதான் என்னே! பக்திமைக் கரை கண்டபக்தரே! பதிதபாவனரின் நண்பரே! இவ்வாசனத்தில் அமரவேண்டும். (கபீர்தாஸ் ஸ்ரீ இராம படத்தை வணங்கிப் பின்னர் ஓர் ஆசனத்தில் அமருகின்றனர்) அன்னம் அருந்த அதிதி இல்லையே எனத்துயருற, அன்புடன் வந்த என் சத்குருவே! அருள்புரிய வேண்டும். ஸ்ரீ இராமனின் மகிமையே மகிமை! அன்பரே! தமது சேவையைக்கண்டு, பல வருடங்களாயினவே. இது நாள்வரை தம்மையன்றோ எதிர்பார்த்திருந்தேன்.

**கபீர்.** கோபன்ன! இது என்ன உலகம்! ஜாதி மதம் என்பனவற்றையே மிகவும் பாராட்டுகின்றது. யார் எந்த மதஸ்தராய் இருந்தால் என்ன? கடவுளை யார் யார் எங்கெந்த விதமாக, நினைத்து வணங்குகின்றார்களோ, அந்தந்த விதமாக, ஜப ராமன் காக்ஷியளித்து, மோக்ஷமளிக்கின்றார். இதனையறியாத பாமர ஜனங்கள் மகமதியன் ஒருவன் ஸ்ரீ இராம நாமத்தைச் சொல்லுவதாவது என என்னை ஏளனம் செய்து, இங்குச்செல்லும்படித் தெரிவித்தனரே! எது எப்படியிருந்த போதிலும் நான் இங்குவந்து உன்னைப் பார்த்ததைப்பற்றி மிகவும் சந்தோஷமடைகின்றேன். அப்பனே! உன்னுடைய இல்லமா இது?

**கோப.** எளியேன் குடிசை ஈதே.

**கபீர்.** இதுவும் ஸ்ரீ இராமனின் கட்டளைபோலும்.

**கோப.** (காலில் விழுந்து) ஓ மகானுபாவா! உம்மை நான் அறிவேன். தாங்கள் ஸ்ரீ இராமபிரான் அருட்பெருங்கருணைக்குப் பாத்திரமானபக்தரல்லரோ. சுருங்கச் சொல்லுமிடத்துத் தாமே ஸ்ரீ இராகவனின் வலதுகரம் என்பதை அறிவேன். பெரியீர்! தேவரீர் தரிசனமே, ஸ்ரீ இராமனைச் சேவித்தது போலாயிற்று. அடியேன் பாசபந்தங்கள் அனைத்தும் போயின. ஸ்வாமீ! ஸ்ரீ இராமச்சந்திர மூர்த்தி தேவரீருக்குப் பிரத்யக்ஷமல்லவா? ஆதலின் அடியேன்மேல் கிருபைகூர்ந்து, இன்னும் சோதனைக்குள்ளாக்காமல், சர்வலோக சரண்யனை ஸ்ரீ இராமனைச் சேவிக்கும் பாக்கியத்தை நான் அடையத் திருவருள் புரியவேண்டும்.

**கபீர்.** கோபன்ன! தயாநிதியாகிய ஸ்ரீ இராமனைக்காணுதல் அரிது. மேலும் பகவத்சேவை செய்யவேண்டும் என்கிற எண்ணம் உதிப்பதே பெரிது. ஆதலின் இன்னும் சிறிது காலம்

சென்றபின்பு உனக்கு பகவத்சேவை கிடைக்குமாறு செய்விக்கின்றேனே.

**கோப.** ஸ்வாமீ! இச்சரீரம் நீரிற் குமிழியை ஒக்கும். குமிழியானது எப்படித்தோன்றி மறைகின்றதோ அதுபோன்று, இச்சரீமும் தோன்றிமறையும். பின்னர் பகவானைச் சேவித்தலோ முடியாது இப்பொழுதே சேவித்தல் வேண்டும். மேலும் அறிவுடையீர்! எனக்கு ஸ்ரீஇராமன் சேவை கிட்டுமாறு செய்வது தங்களுக்கும் அரிதோ? தாம் நினைத்தால் அடியேனுக்கு ஸ்ரீ இராமதரிசனம் கிடைக்கும். இது உண்மை. அன்பரே! உம்மைக்கண்ட இந்நாளே நன்னாள். என் ஜன்மமும் சாபல்யப்பட்டது. எனக்குத் தடைசொல்லாது உபதேசம் செய்ய வேண்டுகின்றேன்.

**கபீர்.** பக்தனே! உன் பக்தி மிகவும் பாராட்டத்தக்கதே. ஆதலின் ஸ்ரீ இராமனைத் தரிசிப்பதற்குச் சிரேஷ்டமான தாரக மந்திரத்தை உபதேசிக்கின்றேன். அருகினில் வா. (கோபன்று அருகில்வர, கபீர் தாரகமந்திரத்தை உபதேசிக்கின்றனர்) அன்பா! இம்மந்திரத்தை, பிராதக்காலத்தில் உச்சரித்து, ஸ்ரீ இராகவனை வணங்குவையேல், கூடியசீக்கிரம் நீ ஸ்ரீஇராமனைக்கண்டு அவரது சிறந்த பக்தனாய் விளங்குவாய். நான் சென்று வருகின்றேன்.

**கோப.** பெரியீர்! அடியேன் கிரகத்தில் போஜனம் செய்தே செல்லவேண்டும்.

**கபீர்.** உன் நிலைமையை நான் நன்கு அறிவேன். ஸ்ரீஇராமபிரானிடத்தில் நீ வைத்திருக்கும் பக்தியும், அன்பும், உன் இனிய சொற்களுமே என் ஆத்மாவைத்திருப்தி செய்துவிட்டன. ஆதலின் நீ வருந்த வேண்டாம். வந்த காரியம் முடிந்தது. இனி நான் போய் வருகின்றேன்.

**சரஸ்.** ஸ்வாமீ! தயைசெய்து, ஸ்ரீஇராமனுக்கு, இன்று நைவேத்யம் செய்த, பாலும் பழங்களையுமாவது உட்கொள்ள வேண்டும்.

**சுந்த.** ஆம்! தாத்தா, தயவு செய்யவேண்டும்.

**கபீர்.** குழந்தாய்! சந்தோஷம். உங்களிஷ்டப்படி செய்கின்றேன். (சரஸ்வதியளித்த பால் பழங்களை உட்கொண்ட பின்னர் எழுந்து) அன்பர்களே! சென்று வருகின்றேன்.

**கோப.** ஸ்வாமீ! இனி தங்களை எச்சமயம் காண்பதோ?

**கபீர.** கோபன்னு! உன்னைவந்து காணும்சமயம் எனக்குத் தெரியும். அச்சமயம் வந்துசேருவேன். உனக்கு, பகவானின் கருணை கிட்டும், பின்னர் உலகோர் துதிக்கும் தூயனுவாய். சென்று வருகின்றேன். (கோபன்னு, சரஸ்வதி, சுந்தரம், மூவரும் நமஸ்கரிக்கின்றனர்.) சர்வ மங்களமும் உண்டாவதாக. (செல்லல்)

**கோப.** பெண்ணே! இப்புண்யபுருஷர், அடியேன் கடைத்தேற இறைவனுல் அனுப்பப்பட்டவர் என்பதற்கையமில்லை. ஆ! நான் வெகு நாளாய்த் தாரகமந்திரத்தைக் கோரியிருந்தேன். பூர்வபுண்யத்தால் அதை எய்தினேன். இனி காலதூதருக்கும் பயப்படவேண்டியதில்லை. புண்ய தீர்த்தங்கள் செல்ல வேண்டுவதில்லை. ஸ்ரீ இராமன் ஒருவனையே பஜித்தால் அநேக ஜன்மங்களிற் செய்த பாவம், இந்த ஜன்மத்தோடு, நீங்குவதுமின்றி, பிறவித்துன்பமும் நீங்கும். இனி என் கவலைகள் நீங்கின.

**சரஸ்.** அன்பரே! அமுதுண்ண நேரமாயிற்றே.

**கோப.** இதோ வந்தேன். சுந்தரம்! சாப்பிட்டு வரலாம் வா.

**சுந்த.** இன்றை இரவு பஜனைக்கு, அலங்காரம் செய்துவிட்டுப்பின்னர் நான் சாப்பிடுகின்றேனே.

**கோப.** குழந்தாய்! சாப்பிட்டபிறகு, அக்காரியத்தைச் செய்யலாம் வா. (மூவரும் உள்ளே செல்கின்றனர்.)

காக்ஷி முடிகின்றது.

---

## அங்கம் 1. காக்ஷி 2.

---

இடம்: கோபன்னுவின் பூஜாக்கிரகம். காலம்: இரவு.

(மோகன்தாஸ், சுந்தரம், சரஸ்வதி, முதலிய பக்தர்களுடன், கோபன்னு பஜனை செய்து கொண்டிருக்கின்றனர்.)

**கோப.** (சங்கீதம் முடிந்தவுடன்) ஸ்ரீஜானகி காந்தஸ்மரணே!

**பக்த.** ஜய, ஜய, இராம்!

**கோப.** (கற்பூரஹாரத்தி எடுத்த பின்னர், யாவருக்கும் திருநீர் திருத்துழாய் கொடுத்து அனுப்புகின்றனர். பக்தர்கள் சென்றவுடன், சந்நதியில் அமர்ந்து, கைகூப்பி) இரகுநந்தனா! தங்களுக்குத் தக்க நைவேத்யம் செய்து வினியோகம் செய்யக்கூடச் சக்தியில்லாமல் போயினனே. பக்தர்களைப் பண்புடன் நோக்கி, அவர்களுடைய இன்னலை அன்புடன் போக்கும் அண்ணலே! வறுமை என்னும் பெரும் வியாதியால் வருந்து மென்னைப் பெருமைப்படுத்த தாங்கள் வல்லவர் அல்லரோ! குசேலரின் குறையைத்தீர்த்த மாசற்ற மணிவண்ணா! தாசனாகிய எந்தன் பாசமறக் காத்துரக்ஷிப்பீர்.

**சரஸ்.** நாதா! இதற்கோ வருந்துகிறீர். தாங்களோ சகல கலைகளையும் நன்கறிந்தவர். ஓர் தக்க இடத்தைப் பார்த்து உத்தியோகத்தில் அமர்ந்தால், அதில் கிடைக்கும் ஊதியத்தைக் கொண்டு, உள்ளன்போடு எம்பிரானைத் துதித்து மகிழலாமே. தவிர, நம்மைப் பீடித்திருக்கும் தரித்திரமானது நம்மிடத்தில் இனி தரித்திரோம் என விலகிச்செல்லுமே.

**கோப.** (சுந்தரம் படுத்து உறங்கி விடுகின்றான்)— பெண்ணே! நீ கூறுவது ஒருவாறு ஒப்புக் கொள்ளத்தக்கதே. ஆயினும் இவ்வூரில் வேலைக்குப் பிரயத்தனம் செய்தலைவிட, வெளியூருக்குச் சென்று முயற்சி செய்தல் நலமெனத் தோன்றுகிறது.

**சரஸ்.** வெளியூர்களில் தங்களை அறிந்த பெரிய மனிதர்கள் யாராவது இருக்கின்றனரோ?

**கோப.** (யோசித்து) பிரியே! எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. எனது தாயின் சொந்த சகோதரர்களும், என் மாமன் மார்களுமான அக்கன்னா, மாதன்னா, என்பவர்கள், தற்சமயம், கீர்த்திவாய்ந்தவரும், நீதிதவறாதவருமாகிய, ஐதராபாத் நவாபான தானேஷாவிடம், மந்திரிகளாக அமர்ந்திருக்கின்றனர். ஆதலின் அவர்களிடம் சென்று, என் மனக்குறையை வெளியிடுவேனேல், எனக்குத் தக்க ஊதியம் கிடைக்கும் வழியைத், தெரிவித்து உதவிசெய்வார்கள்.

**சரஸ்.** பிராணபதி! நான் கூறுவதைத் தயவுசெய்து கேட்டருளவேண்டும். வறுமையை அடைந்த நாம் உறவினர்

இடம் சென்றால், அவர்கள் நம்மை ஒரு நாளும் மதியார். இதைத் தாங்களே யோசித்தால் நன்கு விளங்கும். நாம் ஒரு சமயம் தனவந்தர்களாய் இருந்தபொழுது, நம் அகத்திற்கு அளவற்ற செல்வந்தர்களும், நண்பர்களும் எத்தனை தரம் வந்தனர்! இப்பொழுது அவர்களில் யாராவது ஒருவர், இவ்விடத்தில் தலைகாட்டுகின்றனரோ! இல்லையே! நாதா! அவர்களின் துமீ நான் குறைகூறுவதாகத்தாம் நினைக்கவேண்டாம். இது உலக இயல்பு மேலும், தரித்திர திசையில் இருக்கும் ஒருவரை, நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவருவோம் என நினைக்கும் உத்தமர், உலகில் லக்ஷத்தில் ஒருவர் இருப்பது அரிது. ஆதலின், கல்விச்செல்வம், பொருட்செல்வம், அதிகாரம், முதலியவைகளால் மேன்மையுற்றிருக்கும் தமது மாமன்மார்களிடம் சென்று, யாசிப்பது உசிதமல்ல என்பது அடியாளின் அபிப்பிராயம்.

**கோப.** பெண்ணே! நீ கூறுவது உண்மையே. எனினும் எனது மாமன்மார்கள், என்னிடத்தில் அன்புள்ளவர்களும், ஈஸ்வரனிடத்தில் பக்தி யுடையவர்களுமாதலால், செல்வச் செருக்கில் ஒரு பொழுதும் ஆழ்ந்திருக்கமாட்டார்கள் என்பது எனது துணிபு. அதிருக்கட்டும், நேரமாகின்றது. நீ சென்று சயனித்துக்கொள்.

**சரஸ்.** பாபம்! நமது சுந்தரம் இவ்விடமே அயர்ந்து நித்திரைபோயினன்.

**கோப.** அவன் அப்படியே உறங்கட்டும். (சரஸ்வதிசெல்லல்) ஹே! ஸீதாபதே! உன்னையான் செவ்வனே வணங்க இவ் வறுமைப் பிணியினின்றும், அகற்றுவாய். (கையைத் தலையணையாகக்கொண்டு, சந்நதியிற் படுத்து உறங்குகின்றார். அதிகாலையில் பக்த போஷகரான ஸ்ரீ இராமலக்ஷ்மணர்கள் தோன்றி புன்னகை புரிகின்றனர்.)

**இரா.** ஓ! கோபன்னா! உன்வேண்டுகோள் கேட்கப்பட்டது. ஆதலின் சிக்கிரமே நீ எழுந்து ஐதராபாத்திற்குச் சென்று உன்குறையை, உன்மாமன்மார்களான, அக்கன்னா, மாதன்னா என்பவர்களிடம் தெரிவித்து, அவர்களின் உதவியால் தானேஷாவிடம் ஓர் உத்தியோகத்தை யடைவாய். (மறைந்து விடுகின்றனர்.)

**கோப.** (திடீரென எழுந்து, தேவர்கள் நின்றதிக்கை வணங்கிய வண்ணம்) ஆ! எம்பிரான் மறைந்தனரே! ஆஹா! என்ன அழகு!

என்ன கம்பீரம்! என்ன சாந்தம்! தாரகமந்திரத்தின் தன்மையே இரகுகுல திலகமணியாகிய, ஸ்ரீ இராகவனின் தரிசனத்தை இன்று யான் அடையும்படி செய்வித்தது என்பதற் கையமில்லை. அவர் தம் திருவருட்படி இன்றே செல்லுகின்றேன் மாமன் மார்களிடம். (சந்தோஷத்துடன்) சரஸ்வதி!

**சரஸ்.** (உள்ளிருந்தபடியே) இதோவந்தேன். (பிரவேசித்தல்)

**கோப.** பெண்ணே! இன்று ஓர் அதிசயமான கனவு கண்டேன். அக்கனவில், இலக்ஷ்மண சமேதராய், ஸ்ரீ இராம பிரான் என்முன் தோன்றி "ஓ கோபன்ன! உன்வேண்டுகோள் கேட்கப்பட்டது. ஆதலின் சீக்கிரமே நீ எழுந்து ஐதராபாத் திற்குச் சென்று உன்குறையை, உன்மாமன்மார்களான, அக் கன்ன, மாதன்ன, என்பவர்களிடம் தெரிவித்து, அவர்களின் உதவியால் தானேஷாவிடம் ஓர் உத்தியோகத்தையடைவாய்," எனக் கூறிமறைந்தனர்.

**சரஸ்.** பகவான் நம்மீது கருணைகொண்டே, இவ்விதம் நமக்கு வழிகாட்டினர்போலும். (காகங்கள் கரைகின்றன)

**கோப.** காதலீ! கவனித்தனையா! காகங்கள் கத்துகின்றன. இனிக்கமலக்கண்ணன் கட்டளைப்படி இப்பொழுதே, நான் கால் நடையாக ஐதராபாத்திற்குச் சென்று, என் மாமன்மார் களைக் கண்டு, வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து வருகின்றேன். அது வரையிலும், நீ இவ்விடத்தில், நம் குழந்தையுடன் இருந்து ஸ்ரீ இராமனை முக்காலும் பூஜித்துவருவாய். நான் சென்று வருகிறேன்.

**சரஸ்.** தங்கள் ஆக்ஞை. (நமஸ்கரிக்க, கோபன்ன அவளை ஆசீர்வதித்து, தானும் ஸ்ரீ இராமனை வணங்கிப்புறப்படுகின்றார்.)

காக்ஷி முடிகிறது.

---

## அங்கம் 1. காக்ஷி 3.

இடம். ஐதராபாத்தில், அக்கன்ன, மாதன்ன, இவர்களின் மாளிகையின் ஓர் அறை. காலம். முற்பகல்.

(அக்கன்னு ஓர் சாய்ந்த நாற்காலியில் அமர்ந்திருக்க, மாதன்னு மேஜையில் அமர்ந்த வண்ணம், சில கடிதங்களைப்பார்த்துக் கையொப்ப மிட்டுக் கொண்டிருத்தல்—காவலன் ஒருவன், வாயிலில் காத்திருக் கின்றான்—தானேஷாவிடமிருந்து ஒரு மகம்மதிய காவலன் பிரவேசிக் கின்றான்.)

**ம. கா.** சலாம்! சலாம்! சலாம்!

**மாத.** ஷேக்! என்ன சமாசாரம்!

**ம. கா.** ஷாஹின்ஷா இக்கடிதத்தைத் தங்களிடம்கொடுத் துப் போடும்படித் தெரிவித்தார்.

**மாத.** சரி. நீ போகலாம். (காவலன் வணங்கிச் செல்லல்)

**அக்க.** தம்பி மாதன்னு! நமது அரசர் பெருமான், எழுதிய கடிதத்தைப் பிரித்துவாசி.

**மாத.** (கடிதத்தைப் பிரித்து வாசித்தல்)

ஐதராபாத் அரண்மனை.

இப்பவும் நீங்கள் செய்த சிபார்சுப்படி, நமது நகரின் மேற்கு வீதி யில் யாத்திரீகர்கள் வந்து தங்கிச்செல்வதற்கு, அழகிய சத்திரம் ஒன்று ஒரு லக்ஷம் மோகராக்களுக்குள் கட்ட, இதனால் உமக்கு உத்திரவு இடு கின்றோம்.

தானேஷா,
ஐதராபாத் அரசர்.

ஆஹா! நமது அரசரானவர், நமக்குத் தாய் போலத் தோன்றி மன்னுயிர்யாவும், தன்னுயிர்போலன்றோ எண்ணி வரு கின்றனர். தன்னாலாவது, தன் உறவினர்களாலாவது, பகைவர் களாலாவது, திருடர்களாலாவது, ஏனைய உயிர்களாலாவது, சிறிதும் தொந்தரைவாராமல், பிரஜைகளுக்கு க்ஷேமம் உண்டா கும்படி, நெறிதவறாது, செங்கோல் செலுத்தி மாண்புடன் விளங்குகின்றனர். மேலும், ஜனங்களிடத்திற் கடுஞ்சொற் சொல்லாமலும், கொடுந்தண்டனை விதியாமலும், அவரவர் தார தம்மியமறிந்து, ஓரமின்றி, கீர்த்தியுடன், அரசுபுரிவதால் அன்றோ, மாதம் மும்மாரி பெய்து, சர்வ ஜனங்களும் புகழவும், துதிக்கவும், இராஜ்யபாரம் வகிக்கின்றனர்.

அக்க. தம்பீ! அதனுல் தான் இத்தகைய பெருங்குணங் கள் வாய்ந்த தானேஷாவிடம் நாம் சந்தோஷத்துடனும், உற் சாகத்துடனும், சேவைசெய்கின்றேம். சரி! இனி, யாத்திரீகர் களுக்கு வசதியுள்ள சத்திரத்தைச் சீக்கிரமே நல்ல, சிற்பசாஸ் திரியைக்கொண்டு கட்டிமுடித்தல்வேண்டும். (காவலன் பிரவேசம்)

காவ. பத்திராஜலம் தாலூக்காவின் தலைமை குமஸ்தா வான திம்மாஜிராவ் அவர்கள், தங்கள் பேட்டிக்குக் காத்திருக் கின்றுர்.

அக்க. வரச்சொல். (காவலன் செல்ல திம்மாஜிராவ் பிரவேசம)

தி. ரா. காருண்யமுள்ள மந்த்ரிகளுக்கு நமஸ்காரம்.

அக்க. வாருங்கள். என்ன சமாசாரம்! எங்களால் ஆக வேண்டியது ஏதாவது இருந்தால் சீக்கிரமாகத் தெரிவியும்.

தி. ரா. பிரபோ! பத்திராஜலம் தாசில்தார் இறந்தும் தாங்கள் இன்னும் அவ்வேலைக்கு ஒருவரையும் நியமிக்கவில்லை. ஆதலின் மந்திரிகள் என்மேல் கிருபை வைத்து அவ்வேலையை எனக்கே அளிக்கவேண்டுகின்றேன். ஏனெனில், புதிதாக ஒருவரை நியமிப்பதைவிடப் பத்து வருஷங்களாகப் பழகிய என்னை நியமிப்பது நலமல்லவா?

அக்க. (யோசித்து) சரீ. நீர் போய்வாரும். நான் உமது விஷயமாகத் தானேஷாவிடம் கலந்து பேசி, பின்னர் ஆக வேண்டியதைச் செய்கின்றேன்.

தி. ரா. ஏதோ, நான் சொல்வதைச் சொல்லிவிட்டேன் ஏழைமீது கிருபை செய்யவேண்டும். உத்திரவு பெற்றுக்கொள் கின்றேன். நமஸ்காரம். (செல்லல்)

அக்க. தம்பி! இப்பொழுது வந்து சென்ற திம்மாஜீ, கர்வம் படைத்தவர். முன்பு பத்திராஜலம் தாசில்தாராய் இருந்த வருடன் அடிக்கடி சச்சரவு செய்து வந்ததுமின்றி, லஞ்சம் வாங்குவதில் சாமர்த்தியமுள்ளவர். ஆனது பற்றி இவர் அவ் வேலைக்கு உதவமாட்டார்.

மாத. அண்ணு! அப்படியாயின் கற்றறிந்தவரும், தெய்வ பக்தி உடையவருமான, ஒருவரைத் தேர்ந்தெடுத்து அங்கு

அனுப்பவேண்டும். அத்தகைய தன்மை வாய்ந்தவர் யார் இருக்கின்றனர்.

**காவ.** (உள்ளிருந்தபடியே) என்ன ஐயா? உமக்கு புத்தியில்லை எவ்வளவு தரம் சொல்லுகிறது. பார்ப்பதற்கு இது சமயமல்ல. போம்.

**மாத.** காவலா? இது என்ன கூச்சல்?

**காவ.** மகராஜ்! யாரோ ஒரு ஏழைப்பிராமணர் தங்களைக் காண வேண்டுமாம். தங்களைப்பார்ப்பதற்கு இது சமயமல்லவென்று நான் எவ்வளவோ தெரிவித்தும், ஒரே பிடிவாதமாகத் தங்களைப் பார்க்கவேண்டுமென்று கூறுகின்றார்.

**அக்க.** அவர் பெயர் யாது என்பதனை விசாரித்தனையா?

**காவ.** விசாரித்தேன். நெல்கொண்டாபல்லியில் இருந்த, லிங்கன்ன என்பவரின் புத்திரராம். தன் பெயர் கோபன்ன என்றும் தெரிவித்தார்.

**மாத.** யார்! யார்! கோபன்னவா! நமது சகோதரியின் குமாரன் அன்றோ! அடே காவலா! என்ன பிழை செய்தாய்.

**அக்க** தம்பீ! நீயே சென்று அவரை உடனே அழைத்து வா. (மாதன்ன ஓடி, எளிய உடையுடன் வந்த கோபன்னவை அழைத்து வருதல்) கோபன்ன! வரவேண்டும். வீட்டில் யாவரும் க்ஷேமந்தானே.

**கோப.** ஸ்ரீ இரகுநந்தனன் கிருபையால் யாவரும்க்ஷேமமே.

**மாத.** கோபன்ன! என்னுடைய அக்காள் இறந்து பல வருடங்களுக்குப் பிறகாவது, எங்கள் மீது கிருபை கூர்ந்து வந்தீர்களே. இச்செய்கையே எங்களுக்குப் பரமசந்தோஷத்தை அளிக்கின்றது.

**அக்க.** சகல கலைகளில் வல்லவரும், ஈசனிடத்தில் பக்தி கொண்டவரும், செல்வச் சீமானுயுமிருந்தவருமான, தங்கள் உடைகளில், வறுமையென்னும் நோய், வாசம் செய்வதாகத் தெரிகின்றதே.

**கோப.** மாமா! செல்வந்தர்களாய் இருந்த என் தாய்தந்தையர் மரண மடைந்தபின்னர், நான் மிகவும் துயருற்று, இவ்வுலகத்தை வெறுத்து. என் பூர்வ சொத்துக்களையும், பொருள்களையும் சத்காரியங்களில் செலவு செய்து விட்டேன். அதனால் வறுமை மேலிட்டது. தற்சமயம் உதர போஷணத்திற்குக்கூட, வழியில்லாமல் கஷ்டப்படுகின்றேன். ஆதலின் என் நிலைமையை உத்தேசித்து, எனக்குத்தக்க உத்தியோகம் ஒன்று இவ்வூர் ராஜ்பத்தில் கொடுத்தால், நானும் என்குடும்பத்தாரும், உங்களுக்கு நன்றி செலுத்துவதுடன், ஸ்ரீ இராமனைத் துதிப்போம்.

**அக்க.** அப்படியா! இனி நீர் கவலைப்படவேண்டாம். தம்முடைய குணத்தையும், தெய்வபக்தியையும், நாங்கள் நன்கு அறிவோமாதலின், எங்கள் காருண்யமுள்ள தானேஷாவிடம், உம்மைப்பற்றி எடுத்துக்கூறி ஓர் உத்தியோகத்தைச் செய்து கொடுக்கின்றோம். தெய்வகிருபையால், தற்சமயம் பத்திராஜலம் தாசில்தார் வேலை ஒன்று காலியாக இருக்கின்றது. இனிக் கவலைப்படவேண்டாம்.

**மாத.** கோபன்னா! நல்ல சமயத்தில் தாங்கள் வந்தீர்கள். வாருங்கள், நாம் ஸ்நானம் செய்து, வேறு ஆடைகள் அணிந்து கொண்டு, தானேஷா இன்று தலைமை வஹிக்கும் சபாமண்டபத்திற்குச் செல்வோம்.

**கோப.** கிருபாசாகரமாகிய ஸ்ரீ இரகுஇராமா! உமது திருவிளையாடலைப் புகழ யான் வல்லன் அல்லேன்.

**அக்க.** காவலனே! போயிகள் தலைவனிடம் சென்று, மூன்று பல்லக்குகளுடன் தயாராக இருக்கும்படி தெரிவித்துவா. நாங்கள் பூஜையை முடித்துவிட்டு, போஜனம் செய்து, உடனே வருகின்றோம்.

**காவ.** சித்தம் பிரபோ! (வணங்கிச் செல்லல்.)

(அக்கன்னா, மாதன்னா, கோபன்னா, மூவரும் செல்லல்.)

(காக்ஷி முடிகிறது.)



## அங்கம். 1. காக்ஷி. 4.

---

இடம். தானேஷாவின் சபாமண்டபம். காலம். முற்பகல்.

(ஜயதேவர், காரா ஆலி, இந்துமுகமதிய பிரபுக்கள், சாதுக்கள், வீரர்கள், சேவகர்கள், முதலியோர்கள் முறையே வீற்றிருக்கின்றனர்—அக்கன்னு, மாதன்னு, பிரவேசிக்க யாவரும் எழுந்து நிற்கின்றனர்.)

**அக்க.** சபையோர்களே! வந்தனம். அவரவர்கள் ஆசனத்தில் அமரவேண்டும். (ஒரு சேவகனைப்பார்த்து) சேவகா! என்னுடன்கூடப் பல்லக்கில் வந்தவரை, என்னுடைய கச்சேரி அறையில், அமரச்செய். பின்னர் நான் தெரிவிக்கும் பொழுது இங்கு அழைத்து வரலாம்.

**சேவ.** உத்திரவு. (செல்லல்)

(தாரைகள் ஊத, தம்பட்டங்கள் அடிக்க, சேவகர் வெள்ளிக்கோல் முன் தாங்கிவர, நாட்டியப் பெண்கள் நடிக்க, வெண்சாமரைகள், இருபுரமும் வீச, தானேஷா மகாராஜன் வர, அவர் பின் அங்கியை, இரு அழகிய பாலியர்கள தூக்கிவருகின்றனர் சபையோர், யாவரும் மண்டியிட்டு மும்முறைவணங்கி நிற்க, அரசர், தன் சிம்மாசனத்தில் அமருகின்றூர்.)

**தானே.** சபையோர்காள்! மிகவும் சந்தோஷம். உங்கள் அனைவருக்கும் நாம் பிரதி வந்தனம் செய்கின்றோம். யாவரும் உட்காருங்கள். (நாட்டியப் பெண்களைப்பார்த்து) அழகியபெண்களே! இன்று நம் மனம் மிகவும் சந்தோஷமாய் இருக்கிறபடியால் உங்களுடைய நர்த்தனத்தைக்காண நமக்கு ஆவல் அதிகமாக யிருக்கின்றது.

**நா. பெ.** தங்கள் ஆஞ்ஞை பிரபோ! இதோ நடிக்கின்றோம். (நடனம் செய்ய, சபையோர் யாவரும் சந்தோஷமடைதல்)

**தானே.** (தன் கழுத்திலிருந்து இரண்டு முத்துமாலைகளைக்கழற்றி) நன்வனிதைகளே! உங்களுடைய நடனம் நம்மை மிகவும் சந்தோஷப்படுத்தியது. ஆதலின் இம்மாலைகளை உங்களுக்கு நாம் பரிசாக அளிக்கின்றோம்.

**நா. பே.** சலாம் ஷாஹின்ஷா. (மண்டிபோட்டு வணங்கி மாலைகளைப்பெற்றுச் செல்லல்)

**தானே.** அக்கன்ன! உலகத்தில் மனிதன் மிகவும் புண்பம் செய்தே இத்தகைய பெரிய பதவியை அடையவேண்டுமல்லவா!

**அக்க.** உண்மை ஷாஹின்ஷா! ஒருவன் பூர்வத்தில் செய்த கருமத்தின்படியே அதன்பயனை இச்சென்மத்தில் அனுபவிக்கின்றான்.

**தானே.** மந்திரிகாள்! நம் குடிகள் யாவரும் க்ஷேமமாகவும், இராஜவிஸ்வாசத்துடனும், நம் சட்டதிட்டங்களுக்கு உட்பட்டும் நடக்கின்றனரா?

**அக்க.** யாவரும், தங்களுடைய ஆக்ஷியின் முறை தவறாமல் நடந்துகொண்டு க்ஷேமமாக இருக்கின்றனர்.

**தானே.** அச்சா! சேனைத்தலைவரான காராஆலி! நம்முடைய சைன்யங்களெல்லாம், நூதன முறையில், செவ்வையாக, பயிற்சி செய்விக்கப் படுகின்றனவா?

**கா. ஆ.** ஷாஹின்ஷா! நமது வீரர்களெல்லாம், நூதனமான யுத்தங்களை வெகு எளிதில் கற்றுக்கொண்டனர். தாங்கள் அவர்களை எப்பொழுது வேண்டுமானாலும், பரிசீலனை செய்யலாம்.

**தானே.** பஹுத் அச்ஹா! ஜயதேவ்! நம்முடைய சிற்றரசர்களும், இன்னும் நமக்குக் கீழ் உள்ள தாசில்தார் முதலிய உத்தியோகஸ்தர்களும், நமக்குச் சேரவேண்டிய பகுதிப் பணத்தை காலந்தவறாமல் செலுத்திவருகின்றனரா?

**ஜ. தே.** யாவரும் தவறாமல் காலா காலங்களில் பணத்தைச் செலுத்திவிடுகின்றனர். ஆயினும் பத்ராஜலத்திலிருந்து...இத்தவணைப் பணம் இன்னும் வரவில்லை.

**தானே.** (சிறிதுகோபத்துடன்) கியா ஆச்சர்யம்! அக்கன்ன!

**அக்க.** மகாராஜ்! சமீபத்தில் அவ்வூர் தாசில்தார் இறந்து போனபடியால் பணம் வரவில்லை என நினைக்கின்றேன்.

**தானே.** புதுமனுஷன் ஒருவனை ஏன் நியமிக்கக்கூடாது?

**அக்க.** ஷாஹின்ஷா! இவ்வேலையின் விஷயமாக யான் ஒரு விஞ்ஞாபனம் செய்ய எண்ணுகிறேன். அதனை நான் தெரிவிக்க உத்திரவு அளிக்கவேண்டும்

**தானே.** கியா விஞ்ஞாபனம்! இப்பொழுதே சொல்லும்.

**அக்க.** மகாராஜ்! எங்கள் சகோதரியின் புத்திரர் ஒருவர் இருக்கின்றார். அவர் நல்ல குணமுடையவர். சகல கலைகளையும் கற்றறிந்தவர் தெய்வத்தினிடத்தில் மாறாத அன்புடையவர். ஏதோ காலவித்தியாசத்தால், செல்வச் சீமானாயிருந்தவர், ஏழையாகித் தவிக்கின்றனர். ஆதலின் அவருக்கு அந்தப் பத்திராஜலம் தாசில்தார் வேலையைக் கொடுத்துக் காப்பாற்றும்படி வேண்டுகின்றேன்.

**தானே.** பாபம். அக்கன்னா! அவர் எங்கே இருக்கிறார்?

**மாத.** பிரபோ! வெளியில், தங்கள் பேட்டிக்காகக் காத்திருக்கின்றனர்.

**தானே.** ஓ! சரி, அவரை நாம் பார்க்கப் பிரியப்படுகின்றோம்.

**மாத.** சேவகா! என்னுடன் வந்தவரை, சீக்கிரமே இங்கு அழைத்துவா. (சேவகன் செல்ல, கோபன்னா பிரவேசம்.)

**கோப.** (மண்டியிட்டு சலாம் செய்துகொண்டே) இராம்! இராம்!! இராம்!!!

**தானே.** ஆஹா! இவரைப்பார்த்தால், ஆண்டவன் மேல் பக்தி கொண்டவர்போல் நமக்குத்தெரிகிறது. ஹே! பிராமண்! உமது நாமமென்ன?

**கோப.** இராஜனே! அடியேன் பெயர் கோபன்னா!

**தானே.** கோபன்னா! அச்ஹா. உமது சொந்த ஊர்எது?

**கோப.** நெல்கொண்டபல்லி.

**தானே.** இவ்வூருக்கு வந்த காரணம்.

**கோப.** ஷாஹின்ஷா! யான் மிகவும் எளிய நிலைமையில் இருக்கிறபடியால், தங்களிடத்தில் ஏதாவது ஒரு வேலை பெற்று அதனால் ஜீவனம் செய்யலாமென நினைத்து வந்தேன்.

**தானே** அப்படியா! அக்கன்னு! இவரிடம் நாம் சந்தோஷப்படுகின்றோம். ஆகையால் அப்பத்திராஜலம் தாசில்தார் வேலையை இவருக்கே நாம் அளிப்போம். சீக்கிரமே ஓர் ஹுகும் தயார்செய்யும்.

**அக்க.** முன்பே ஓர் விண்ணப்பம் தயார்செய்து என்னிடம் அளித்திருக்கின்றனர். (தானேஷாவிடம் அளித்தல்)

**தானே.** (வாங்கி வாசித்துக் கையெழுத்திட்டு) காராஆலி! இதில் முத்திரை போட்டு, கோபன்னாவினிடம் கொடும்.
(காராஆலி முத்திரையிட்டு கோபன்னாவிடம் அளித்தல்)

**தானே.** கோபன்னா! நீர் என்று வேலையைஒப்புக்கொள்ளப் போகிறீர்?

**கோப.** பிரபு! நெல்கொண்ட பல்லிக்குச் சென்று, என் மனைவியையும் மகனையும் அழைத்துக்கொண்டு, நேராகப் பத்திராஜலத்திற்குச் சென்று, உத்தியோகத்தை ஒப்புக்கொள்கின்றேன்

**தானே.** ரொம்ப சந்தோஷம். மந்திரீ! கோபன்னாவை இருவெண் குதிரைகள் பூட்டிய வண்டியில். தக்க துணைவீரர்களுடன் அமரச்செய்து, உற்ற வெகுமதிகளோடு மரியாதை செய்து அனுப்பும். ஹே! கோபன்னா! நீர் பத்திராஜலம் சென்று, பாரபக்ஷமின்றி பிரஜைகளின் மேல் அன்புவைக்க வேண்டும். பகுதிப்பணங்களைச் சரிவர வசூல் செய்து, குறித்த காலங்களில், நமது கஜானாவில் செலுத்தவேண்டும். ஜாக்கிரதை! உமக்காகச் சிபார்சு செய்த நமது மந்திரிகளுக்கு நல்லகியாதி வாங்கிவைக்கவேண்டும். தெரிகிறதா?

**கோப.** அரசே! ஸ்ரீ இராமனின் அருளால் யான் தங்களிடம் நற்பெயர் பெறுவேன்.

**தானே.** மந்திரி! வேறுவிசேஷமுண்டா?

**அக்க.** இல்லை பிரபு!

**தானே.** இனி சபைகலையலாம். [எழுந்து செல்ல, யாவரும் மண்டிபோட்டு மறுபடியும் வணங்குகின்றனர்.]

காக்ஷி முடிகிறது.

## அங்கம். 2. காக்ஷி. 1.

இடம். பத்ராஜலத்தில் ஓர் தெரு. காலம். காலை.

கிருஷ்ணமாச்சாரியார்-(ஸ்நானத்தை முடித்துக்கொண்டு தலைமேல் மடித்த ஈரவேஷ்டியுடன் பிரவேசிக்கிறார்.)

"இராமாய இராமபத்ராய இராமச்சந்திராய வேதஸே
இரகுநாதாய நாதாய சீதாயாப் பதயே நமஹ"

(இம்மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே செல்ல, இராமசேட் எதிரில் வருகின்றார்.)

**இ. சே.** நமஸ்காரம்!

**கி ரு.** மதனபல்லி இராம் சேட்டா! ஏது இவ்வளவு தூரம் வந்தது?

**இ. சே.** தாசில்தாரான கோபன்னாவின் கிரகத்திற்கு வந்து விட்டுத் திரும்புகின்றேன்.

**கி ரு.** அவரைப்பார்த்தீர்களா? ரொம்ப நல்லமனுஷியர்—தெய்வபக்தியுள்ளவர்.

**இ. சே.** உண்மையே, மகாபக்திமான். தான் இவ்வூருக்குத் தாசில்தாராகவந்தது, தனக்குமிகவும் சந்தோஷத்தையே அளிக்கிறதென்று தெரிவித்தனர். குடிகளிடத்தில் மிக்க அன்புள்ளவரென்றும், வேலையில்மிகவும் சாமர்த்தியமுள்ளவர் என்றும் தெரிகிறது.

கி ரு. அடடா! அவர் முதன்முதல் தாசில் உத்தியோகம் பெற்றுக்கொண்டதினத்தன்று, அவர்செய்த பிரசங்கங்கத்தைக் கேட்டு நம் ஊரார் என்னசந்தோஷமடைந்தனர் தெரியுமா?

இ. சே. ஸ்வாமி! என்னதெரிவித்தார்?

கி ரு. தான் தானேஷாவின் அன்பினுல் அவ்வேலைக்கு வந்ததாகவும் பக்தர்கள்வசிக்கும் ஊராகிய பத்திராஜலத்தில் வாழத் தனக்கு மிகவும் சந்தோஷமென்றும் தெரிவித்தனர். மேலும் குடிகள் தன்மேல் உண்மையான பிரியங்கொண்டிடில் அவர்கள் அரசருக்குச் செலுத்தவேண்டிய, பணங்களைக் குறித்த காலத்தில் செலுத்துவதேயாகும் என்றும், தெரிவித்தனர். இன்னும் ஏதேதோ பிரஜைகளின் மனதைக் கவரும்படியாகப் பேசினர். அவைகளெல்லாம் இப்பொழுது ஞாபகமில்லை. சுருங்கக் கூறிடில், நம் ஜனங்கள் அவரை ஓர் தெய்வப் பிறவியாகவே எண்ணுகின்றனர்.

இ. சே. வாஸ்தவமே. அகத்தின் அழகு, முகத்தில் தெரியும் என்பதேபோல், அவருடைய முகமே, அவருடைய. பெருந்தன்மையையும், தெய்வபக்தியையும், இராஜவிஸ்வாசத்தையும், வெளிப்படுத்துகின்றது.

கி ரு. தெய்வபக்திக்கு என்ன குறைவு! கோபன்ன வேலையை ஒப்புக்கொண்டு இன்னும் ஒரு வருடம் சரியாக முடியவில்லை. ஏன்! ஆமாம், ஒரு வருடம் ஆகவில்லை. அதற்குள் தான் சம்பாதித்த ஊதியங்களைக்கொண்டு, மூன்று தளிகைகள், நான்கு மண்டகப்படிகள் செய்துவிட்டனர். அவைகளின் வைபவத்தை நான் சொல்லிமுடியாது.

இ சே. ஆம்! ஆம், கேள்விப்பட்டேன். தவிர வருகிற ஸ்ரீ இராமநவமி உற்சவத்தன்று தாம் ஓர் தளிகை செய்யப் போவதாகவும், அதற்கு என்னை அவசியம் வரவேண்டும் என்றும் தெரிவித்தார்.

கி ரு. உண்மை. அன்றைபதினம் தாங்கள் அவசியம் வரவேண்டும்.

**இ. சே.** அப்படியே. நேரமாகின்றது. சென்று வருகின்றேன். நமஸ்காரம்., (சென்றவர் மீண்டும் திரும்பி) ஸ்வாமி! — தொந்தரவு கொடுப்பதற்கு மன்னிக்கவேண்டும்.

**கி ரு.** பரவா இல்லேன்னு. என்ன சமாசாரம்?

**இ. சே.** ஆமாம். இதென்ன, நமது தலைமைக்குமாஸ்தா திம்மாஜிராவ், கோபன்னுவின்மேல், சதா கோள் சொல்லுகின்றனர்.

**கி ரு.** விஷயம் தெரியாதா உமக்கு. திம்மாஜி, தானேஷாவின் மந்திரிகளிடம் சென்று, இவ்வூர் தாசில் வேலைக்குப் பிரயத்தனப் பட்டதாம். தன் இஷ்டப்படி தாசில் வேலை கிடைக்காதலால், நமது கோபன்னுவின் மேல் ஏதாவது உளரும். அது கிடக்குன்னு.

**இ. சே.** அப்படியா சமாசாரம்! தெரிந்து கொண்டேன். தங்களுக்கு மிகவும் சிரமம் கொடுத்துவிட்டேன், மன்னிக்கவும். நமஸ்காரம். (இருவரும் செல்லல்)

காக்ஷி முடிகிறது.

---

## அங்கம். 2. காக்ஷி. 2.

---

இடம். பத்திராஜலத்தில் கோபன்னுவின் கிரகம்.

காலம். உஷத்காலம்.

(கோபன்னுவும், அவர் மைந்தன் சுந்தரமும் உறங்கிக் கொண்டிருக்க, சரஸ்வதி, சுத்திசெய்த பூஜைப்பாத்திரங்களைச் சந்நிதியின் முன் வைத்துப் பின் அமர்ந்து புஷ்பங்களைத் தொடுக்கின்றாள்.)

**கோபு.** (திடீரென எழுந்து, நான்கு புறத்தினிலும் பார்த்து வணங்கி விட்டு) ஆ, பிரபோ! பிரபோ! எங்கு மறைந்தீர்?.......

**சரஸ்.** பிராணநாதா! இது என்ன!

**கோப.** பெண்ணே! நான் ஒரு கனவு கண்டேன்.

**சரஸ்.** என்ன கனவு நாதா?

**கோப.** ஆ! ஸ்ரீ இராமன், சீதாலக்ஷ்மண, பரதசத்ருக்கன அநுமத்ஸமேதராய், எளியஉடைகளுடன் தோன்றி என் முன் நின்று ''கோபன்னா! உன்னை நான் இவ்வுன்னத நிலைமைக்குக் கொண்டு வந்தும், இன்னும் எங்களைச் சரிவரக் கவனிக்காமல் இருக்கின்றனையே! நாங்களோ அருகில் உள்ள பத்திராஜல மலையில், குளிரினும், வெயிலினும், பனியினும், மழையினும், தக்க பூஜையின்றி வாடுகின்றோம். ஆதலின் எங்களைத் தக்கமுறையில் வைத்து ஆதரிப்பாயேல், உனக்கு சர்வமங்களமும் உண்டாகும்'' எனத் தெரிவித்து மறைந்தனர். பெண்ணே! இதன் உண்மையைக் கண்டறியவேண்டும். ஆதலின் இன்று சீக்கிரமாக, என் கச்சேரிக்குச் சென்று, வேலையைச் செய்து விட்டு மலைக்குச் சென்று, கனவில் கூறிய காக்ஷியின் உண்மையைக் கண்டறிந்து, அதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்கின்றேன்.

**சுந்த.** (தூங்கி எழுந்து) அம்மா! அப்பா! நான், சற்று முன்பாக ஸ்ரீ இராமனைப் பார்த்தேன். அவர் என்னை அழைத்துக்கொண்டு சென்று, சிலவேடிக்கையான மனிதர்களைக் காண்பித்தார். பின்னர், ''நீ அப்பாவிடம் போ,'' என்று இங்கு என்னைத் தள்ளிவிட்டார்.

**சரஸ்.** கண்ணே! இதுவும் ஸ்ரீ இராகவனுக்கு ஓர் விளையாட்டே. நாளையதினம் ஸ்ரீ இராமநவமி உற்சவமல்லவா. அதனாற்றான், அப்பெருமான் உன் கண் முன்பு தோன்றினர்.

**சுந்த.** அப்பா! நாளை விசேஷத்திற்கு மேளக்காரர் வருவார்களோ?

**கோப.** ஸ்ரீ இரகுநாதனுக்கு என்ன குறைவு! அங்கு யார் வருவது? (கிருஷ்ணமாச்சாரியார் பிரவேசம்) ஓஹோ! நீங்களா வரவேண்டும். வரவேண்டும். அப்பலகையில் உட்காருங்கள். (ஓர் பலகையில் அமரவைத்தல்.) என்ன சமாசாரம்? நான் முன்பு தெரிவித்தபடி நாளை ஸ்ரீ இராமநவமி உற்சவத்திற்காக, செலவு கணக்கு எழுதி வந்திருக்கிறீர்களா?

**கிரு.** சித்தம் செய்து கொண்டு வந்திருக்கின்றேன்.

**கோப.** சந்தோஷம். மொத்தம் எவ்வளவு ஆகின்றது?

**கி ரு.** பிராமணாள் தக்ஷிணை, பூரி, வைதீகச் செலவு எல்லாம் உள்பட 250 ரூபாய்கள் ஆகின்றன.

**கோப.** இவ்வளவுதானா! சரி! அப்படியாயின் சாயந்திரம் வந்து ஆகவேண்டிய காரியங்களைத் தயார் செய்து கொள்ளும். காலையில் சீக்கிரமாக, நாயனக்காரரை வரும்படி தெரிவித்து விடும்.

**கி ரு.** அப்படியே செய்கின்றேன். பின்னர் யான் வரட்டுமா?

**கோப.** சரி. போய் வாருங்கள். ஐயா! ஒரு விஷயம் கேட்க மறந்து விட்டேனே. நமது நகரத்தின் அருகில் உள்ள மலையில் ஏதாகிலும் ஒரு ஆலயம் உளதோ?

**கி ரு.** ஆமாம். வெகுகாலத்திற்கு முன்பு கட்டப்பட்ட ஆலயம் ஒன்று இருக்கிறது. ஆனால் அது பாழாய்ப்போய், விக்கிரகங்கள் மாத்திரம், கண்ட இடங்களில் சிதறிக்கிடக்கின்றன.

**கோப.** என்ன விக்ரகங்கள்?

**கி ரு.** இராமர் இலக்ஷ்மணர், ஸீதை, அநுமான், முதலிய விக்ரகங்களும், இன்னும் ஏதேதோ சில விக்ரகங்களும் காணப்படுகின்றன. ஆனால் அவைகள் இருக்கும் இடங்களுக்குச் செல்வதென்றால், கற்களிலும், முட்களிலும், புதர்களின் இடைகளிலுமே செல்லவேண்டும்.

**கோப.** ஆ! நான் கனவில் கண்டது உண்மையே. சரி. எப்படியும் இன்றுமாலை, அம்மலைக்குச்சென்று, வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வோம். ஜானகி இராம! இனி நின்கவலை விடுவாய்.

**கி ரு.** இனி நான் உத்திரவு பெற்றுக்கொள்கின்றேன்.

**கோப.** சரி. மற்றைப் பிராமணர்களையும் அழைத்துக் கொண்டு, நாளைச் சீக்கிரமே வந்து சேருங்கள்.

கிரு. சரி. போய் வருகின்றேன். (செல்லல்)

கோப. பெண்ணே! நேரமாயிற்று. நான் இன்று சீக்கிரமே ஸ்நானம் செய்து விட்டுப் பூஜையை முடித்துக்கொண்டு, கச்சேரிக்குச் செல்லவேண்டும்.

சரஸ். குளிப்பதற்கு ஜலம் சித்தமாகயிருக்கின்றது.

கோப. இதோ வந்துவிட்டேன். சேவகா!

சேவ. எஜமான்!

கோப. நமது நகரின் அருகில்இருக்கும் சிற்பசாஸ்திரியான யசோதவர்மனை, அழைத்துக்கொண்டு கச்சேரிக்கு வந்து சேர்.

சேவ. உத்திரவு (செல்லல்)

(கோபன்னு, சரஸ்வதி, சுந்தரம், மூவரும் உள்ளே செல்லல்.)

காக்ஷி முடிகிறது.



## அங்கம், 2. காக்ஷி. 3.

இடம். பத்திராஜலம் தாலுக்காக் கச்சேரி. காலம். முற்பகல்.

(நாலைந்து குமாஸ்தாக்கள் எழுதிக்கொண்டிருக்கின்றனர். அவர்களுக்கு முன்னர், திம்மாஜிராவ், கம்பீரத்துடன் உட்கார்ந்திருக்க அவர் முன்னிலையில், கோவிந்தன் கைகட்டிய வண்ணம் வருந்திக் கொண்டிருக்கின்றான்.)

தி. ரா. (கோபத்துடன்) கோவிந்தா! என்ன! தீவட்டி போல் நிற்கின்றாய்? கேட்டதற்கு பதில் என்னடா? சீக்கிரம்.

கோவி. எஜமான் அவர்கள் என்மேல் கிருபைசெய்து, நான் செய்த பிழைகளைப் பொறுத்தல் வேண்டும். நேற்று இரவு திடீரென்று எங்கள் வீட்டு எருமைக்கடாக் கன்றுபோட்டது. அதனால்தான், நேற்று வரவில்லை.

**தி. ரா.** என்ன! உங்கள் வீட்டு எருமைக்கடா கன்று போட்டதா? என்னடா! என்னைப்பரிகாசமா செய்கின்றாய்?

**கோவி.** நான் சொல்வது முற்றிலும் உண்மை. என் எருமை ஓர் கடாக்கன்றை ஈன்றது.

**தி. ரா.** சரி! அது போனால் போகட்டும். இரவுதான் வரவில்லை. காலையில் நீ என் வீட்டிற்கு வந்து, துணிமணிகளை ஏன் துவைத்திருக்கலாகாது? இதோ பார்! உன்னால் நான் இன்று கச்சேரிக்குப் பழைய வேஷ்டியை உடுத்திக்கொண்டு வரும்படி நேரிட்டது. உன்னை என்னதான் செய்யலாகாது.

**கோவி.** எசமா! எருமை (கண்களைத் துடைத்துக் கொண்டு) இன்று காலையில் செத்துப் போய்விட்டது. அதனை எடுத்து அடக்கம் செய்துவர இவ்வளவு நேரம் ஆகிவிட்டது. மன்னிக்க வேண்டும்.

**தி. ரா.** எந்த எழவு செத்தா எனக்கென்னடா? சர்க்கார் பணத்தைத் தண்டத்திற்கு வாங்குவதுமின்றி, எனக்குச்செய்ய வேண்டிய வேலைகளையும் செய்யாமல், உன் இஷ்டப்படி செய்யவா நினைத்தனை? ஏண்டா தடியா! நீ எதற்கு சம்பளம் வாங்குகிறாய்?

**கோவி.** சர்க்காரின் சொந்த வேலையைச் செய்வதற்கே.

**தி. ரா.** (கோபத்துடன் எழுந்து) அடமூதேவி! என்னை இவ்வளவு பேர் எதிரில் அவமானம் செய்யவா நினைத்தனை? இனி இந்தக் கச்சேரியில் நீ வேலைபார்க்கவேண்டாம். ஓடிப்போ. நான் எவ்வளவுதான் பொறுப்பது? உங்கள்மேல் பிசகுஇல்லை. எல்லாம் புதிதாக வந்திருக்கும் தாசில் கொடுக்கும் இடம். அதிருக்கட்டும். ஓய் சுப்பையர்! இன்று கணக்கைக் கொண்டுவாரும். (பக்கத்தில் அமர்ந்திருந்த சுப்பையர் அவசரமாக எழ, மைக்கூடு தவறி, மையெல்லாம் திம்மாஜிராவின் மேஜைமேல் ஊற்றிவிடுகின்றது) ஓய் மடையரே! ஏன் இவ்வளவு அவசரம். உங்கள் பாட்டன் வீட்டுப் பொருள் கொள்ளை போகிறதோ? அநியாயமாய்க் கச்சேரிக் கடிதங்களையெல்லாம் கெடுத்து விட்டீரேங்காணும்?

**சுப்பை.** உத்திரவுப்படி உடனே எழுந்தேன். தவறிவிட்டது. ரொம்ப மன்னிக்கவேண்டும்.

**தி. ரா.** ரொம்ப மன்னிப்பதாவது! கொஞ்சம் மன்னிப்ப தாவது! சுத்த மோசமாய் இருக்கிறதே! ஓய் அது கிடக்கட்டும். வெற்றிலை பாக்குப் போட்டுக்கொண்டு என் முன்பு வரவேண்டா மென்றுநான் எவ்வளவு தடவைஉமக்குச்சொல்லியிருக்கின்றேன்.

**சுப்பை.** ஆமாம், வாஸ்தவந்தான். இன்று எங்காத்தில் ஒரு விசேஷம். அதனால் போட்டுக்கொண்டேன். வாயைக் கொப்ப ளித்து வரத்தவறிவிட்டேன்.

**தி. ரா.** வெளியில்போய் வாயைச் சுத்தம் செய்து வாரும். சீக்கிரம். தாசில் வரும் நேரமாய்விட்டது. (வெளியில், தாரை தம்பட்டம், இவைகளின் சப்தம் கேட்கின்றது.) ஓய் சுப்பையர்! சீக் கிரமாகப்போய் இடத்தில் உட்காரும். தாசில்தார் வந்துவிட்ட னர். (தன் தலைப்பாகையை அணிந்து கொள்ளுகிறார். சுப்பையர் ஓடித் தன்ஆசனத்தில் அமருகின்றார். கோவிந்தனைப்பார்த்து) அடே சனியனே! ஏண்டா வழியில் நிற்கின்றாய். ஒதுங்கிப்போடா.

**கோவி.** என்னைத்தான் வேலைக்கு வேண்டாமெனத் தெரி வித்தீர்களே! அதற்காகத்தான் இவ்விடமே நின்று தாசில்தா ரிடம் உத்திரவு பெற்றுக்கொண்டு போகலாமென நினைத்து நிற் கின்றேன்.

**தி. ரா.** நீ நாசமா........

(கோபன்னா, பிரவேசிக்க யாவரும் எழுந்து நிற்கிறார்கள்.)

**கோப.** (ஆசனத்தின் அருகில் நின்று ஈசனைவணங்கிப் பின்னர் கைகூப்பி) ஸ்ரீ ஜானகி காந்தஸ்மரணே—(யாவரும்)ஜயஜய இராம்! (அமருகின்றார்.)

**கோவி.** (கோபன்னாவை நமஸ்கரித்து எழுந்து) எஜமான் என் பிழைப்பு நித்யகண்டம் பூர்ணாயுசாய் இருக்கிறது. நான் உத்திரவு பெற்றுக் கொள்கின்றேன்.

**கோப.** என்ன விசேஷம். உனக்குநேர்ந்த வருத்தமென்ன?

**கோவி.** தலைமைக்குமாஸ்தா அவர்களின் வீட்டுத்துணிகளை நேற்றுத் துவைக்கத் தவறிவிட்டேன். அதனால் அவர் என்மேல் கோபங்கொண்டு என்னை, தீவட்டியென்றும், மட்டியென்றும்,

மூடன்என்றும், பலவிதமாகப் பேசியதுடன், என்னை இனி வேலைக்கு வரவேண்டாமென்றும் தெரிவித்தனர். அதனால் தான்.........

**தி.ரா.** (எழுந்து) அடதடிப்பயலே! நான் உன்னை அப்படியா திட்டினேன்? அடமடையா! ஏண்டா முழுப் பூசனிக்காயை சோற்றில் மறைக்கப் பார்க்கிருய்?

**கோப.** திம்மாஜிராவ்! வீணுக அவனைக் கோபித்துக் கொள்ளவேண்டாம். சேவகர்களை, சர்க்கார் வேலைக்காகத்தான் உபயோகப்படுத்த வேண்டும். மற்றைப்படி நம்வீட்டு வேலைகளைச் செய்தல் அவர்களுடைய இஷ்டம். கோவிந்தா! இனி ஜாக்கிரதையாக இவரிடம் நடந்துகொள். சரி. மனுக்கொடுக்கிறவர்கள் யாராவது இருந்தால் கூப்பிடு.

**கோவி.** உத்திரவு. மனுக்கொடுக்கிறவாள் கொடுக்கலாம். (மும்முறைகூவ, ஓர் குடியானவன் ஓர் மனுவுடன் பிரவேசிக்கின்முன்.)

**குடி.** ஆண்டவனே! (வணங்கி எழுந்து அம்மனுவை அளிக்கின்முன்.)

**கோப.** (மனுவை வாங்கிக்கொண்டு அன்புடன்) ஐயா! நீர் யார்? எதைவேண்டி இங்கு வந்தீர்?

**குடி.** எசமா! நான் ராஜபல்லி கிராமத்திலிருக்கும் ஓர் ஏழைக்குடியானவன். என் நிலத்துக்குப் பக்கத்திலிருந்த, சரக்காரு நெலத்தே ஆறு குழி எடுத்துக்கிட்டு, சாகுபடி பண்ணதுவாய்த்துவங்க. எங்கூரு, கணக்குப் பிள்ளையும், பட்டாமணியமும் சேர்ந்துகிட்டு, நான் ஒம்பேது, குழி சக்காரு நெலத்தே எடுத்துக் கிண்டேன்னு, வரி ரொம்ப போட்டிருக்காங்க. எசமா! ரொம்ப ஏளைநா. புள்ளைகுட்டிக்காரன். இந்த அநியாயத்தை நேரே வந்து பாத்து எங்கொறையைத் தீக்கணுங்கோ. (வணங்குகிருன்.)

**கோப.** அப்படியா. (யோசித்து) திம்மாஜிராவ்! நான் ராஜபல்லிக்கு என்று முகாம் போட்டிருக்கின்றேன்?

**தி. ரா.** (கடிதத்தைப்பார்த்து விட்டு) வருகிற வியாழக்கிழமை.

**கோப.** ஐயா! நான் வருகிற வியாழக்கிழமை அங்கு வருவேன். நீர் கூறியது உண்மையாய் இருக்கும் பக்ஷத்தில்,உமது குறையை நான் தீர்த்துவைப்பேன். போய்வாரும்.

**குடி.** தருமராசா! உத்திரவு (வணங்கிச் செல்லல்)

**கோப.** கோவிந்தா! திம்மாஜிராவிடமிருந்து என் பார்வைக்கு இன்று வரவேண்டிய கடிதங்களை எடுத்துவா. [கோவிந்தன் திம்மாஜிராவிடம் சென்று, சில காகிதங்களை எடுத்து வந்து கோபன்னாவின் மேஜைமேல் வைத்து ஒதுங்கி நிற்கின்றான். கோபன்னா சில கடிதங்களுக்குக் கையொப்பமிட்ட பின்னர்] ராயர்வாள்! நாராயண பல்லித்தலைவர், நான்கு நாளைக்கு முன்னர் இருதவணைப் பணங்களாகிய நாற்பதினாயிரம் ரூபாய் செலுத்தினாரே, அதை ஏன் இன்னும் கணக்கில் வரவு வைக்கவில்லை.

**தி ரா.** மறந்துவிட்டேன். (எழுந்து அருகில் வந்து வரவுவைக்க கோபன்னா கையொப்பமிடுகின்றனர். ஒரு சேவகன் பிரவேசித்தல்)

**சேவ.** எஜமான்! உத்திரவுப்படி சிற்பசாஸ்திரிகளின் தலைவரான யசோதவர்மர் வந்திருக்கின்றனர்.

**கோப.** சீக்கிரமாக வரச்சொல். (காவலன் செல்ல, யசோதவர்மர் பிரவேசம்.)

**ய. வ.** நமஸ்காரம்.

**கோப.** வரவேண்டும். உட்காருங்கள்......திம்மாஜிராவ்! என் கையெழுத்துக்கு வரவேண்டிய முக்கிய லிகிதங்கள் இன்னும் ஏதாவது இருக்கின்றனவா?

**தி. ரா.** ஒன்றுமில்லை.

**கோப.** சரி. நண்பர்களே! நான் அருகிலிருக்கும், பத்திராஜல மலைக்குச்சென்று, அங்கு எழுந்தருளியிருக்கும், ஸ்ரீஇராகவனைக்காணப் போகின்றேன். ஆதலின் நீங்கள் யாவரும் என்னுடன் வரவேண்டும். இன்று கச்சேரி நடந்த வரையில்போதும். புறப்படுங்கள் யாவரும்.

**தி. ரா.** உத்திரவுப்படி.

**கோப.** ஸ்ரீ ஜானகி காந்தஸ்மரணே [யாவரும்] ஜய, ஜய, இராம். சந்தோஷம். அன்பர்களே! புறப்பட்டு வாருங்கள். நான் முன்பு செல்கின்றேன். யசோதவர்மரே! என்னுடன் வாரும். (இருவரும் முன்பு செல்லல்.)

**தி. ரா.** குமாஸ்தாக்களே! சீக்கிரம் புறப்பட்டுச்செல்லுங்கள். (குமாஸ்தாக்கள் யாவரும் சந்தோஷத்துடன் எழுந்துசெல்லல், திம்மாஜிராவ், வெளிமீய நின்று கொண்டு) ஏ, கோவிந்தா! மேஜையின் மேல், எவ்விடத்திலோ, பொடி மட்டையை மறந்து வைத்து விட்டேன். சீக்கிரம் அதைத்தேடி எடுத்துவா.

**கோவி.** (தனக்குள்) அடகஷ்டமே! மழைவிட்டும், தூவானம் விடவில்லையே. (போய் எடுத்து வருகின்றான். திம்மாஜி பொடியைப் போட்டுக்கொண்டு மலைக்குச் செல்லுகின்றார்.)

காக்ஷி முடிகிறது.

## அங்கம் 2. காக்ஷி 4.

இடம்: பத்திராஜலத்து மலையில் பாழடைந்த ஓர் கோயில்.

காலம். பிற்பகல்.

(ஸீதா இலக்ஷ்மண அநுமத்சமேதராய், ஸ்ரீ இராமபிரானது சிலை காணப்படுகின்றது. யசோதவர்மர், திம்மாஜிராவ், சுப்பையர், கோவிந்தன் முதலியவர்களுடன் கோபன்னா, பிரவேசிக்கின்றனர்.)

**சுப்பை.** (கோபன்னாவின் காலில் உதிரம் பெருகுவதை நோக்கி) எஜமான் கால்களினின்றும் இரத்தம் கொட்டுகின்றதே.

**கோப.** நேசமுடன் ஈசனை வணங்க வந்த நாம் இத்தகைய சிறிய கஷ்டங்களுக்கெல்லாம், உட்படுவது ஓர் பெரிதல்ல. (விக்ரகங்களைப் பார்த்து) ஆ! நம் கனவில் தோன்றிய தெய்வம் இதுவே (கைகூப்பி) தசரதஇராமா! ஜானகிபூமா! உம்மைக்கண்ட மாத்திரத்தில் அடியேன் வினைகள்யாவும் மடிந்தன. இனி நீர் கவலைப் படவேண்டாம். ஐயோ பாவம்! ''மழையிலும், வெயிலிலும்,

குளிரிலும், பனியிலும், நான் கஷ்டப்படுகின்றேன்'' எனத்தெரி வித்தீரே! ஆ! அச்சொற்கள் என் மனத்தை உருக்குகின்றனவே. பிரபோ! உம்முடைய நிலைமை மிகவும் வருந்தத்தக்கதே. (விழுந்து நமஸ்கரித்து எழுந்து) அய்யனே! உமக்கு அழகிய கோயிலைப் பழகிய மனிதரைக்கொண்டு கட்டுவிக்கின்றேன். நண்பர்களே! ''அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது'' அத்தகைய மேன்மையான பிறவியை எய்திய நாம், அந்தகன் ஊருக்குச் செல்லுமுன், தேவ தேவரும் பாபவிமோசனரும், பக்தர்களுக்கு அருள்புரிபவருமான, அகிலாண்டகோடி பிரும் மாண்ட நாயகத்திலகமாகிய, ஸ்ரீமந் நாராயணன், அரிவாசு தேவன், கமலக்கண்ணனையே சரண்புகுந்து, அவருடைய கைங் கர்யங்களில் ஈடுபட்டுச் சேவை செய்தே அப்பெருமானின், கிருபையைப் பெறல்வேண்டும். மேலும் இம்மையிலும் மறுமை யிலும், தலைகொடுத்து உதவுவது தருமமே! தருமம் இல்லை யேல், கருமத்தொல்லையால் அல்லல் படுவோம். ஆதலின் இகபர மிரண்டிலும் சுகந்தருவது நல் அறமே. இவ்வரிய காரியத்தில் ஈடுபட்டயான், ஸ்ரீ இராமனின் கட்டளையை மனதில் இருத்தி, இப்பாழதுண்ட ஆலயத்தைப் புதுப்பிக்க எண்ணுகின்றேன். ஆத லால் அன்பர்களே! தருமகாரியத்தை மேற்கொண்ட என்னுடன் நீங்களும் சேர்ந்து, பண்புடன் தொண்டு செய்து என்ஐயன், கோசலை மெய்யன், கோதண்டக்கையன் கிருபைக்குப் பாத்திரர் களாகக் கோருகின்றேன்.

**சுப்பை.** எஜமான் அவர்கள் கொண்டுள்ள எண்ணம் போற்றத்தக்கதே. ஆலயச் சீர்த்திருத்தங்கள் செய்து பகவா னின் அன்பு பெறுவதும் முறையே.

**ய. வர்.** பக்தியிற் சிறந்த பெரியீர்! தங்கள் எண்ணத்தை அறிந்து கொண்டேன். என்னிடத்தில் தேர்ச்சியடைந்த ஐந்நூறு சிறந்த சிற்பிகள் இருக்கின்றனர். அவர்களைக்கொண்டு வெகு சீக்கிரத்தில் கோயிலைக் கட்டி முடிக்கின்றேன்.

**கோப.** நண்பரே! அழகிய பிரகாரங்களுடன் ஆலய மொன்று இவ்விடத்தில் அமைத்தல் வேண்டும். உற்சவகாலத் தில் பகவான் பவனிசெல்ல, மிகவும் அழகிய பலவகையான வாகனங்களைப் பாங்குடன் செய்தல்வேண்டும். அப்பெருமான் அணிந்திட, செப்புதற்கரிய அணி அணியான ஆபரணங்கள் வேண்டும். இவைகளை உண்டாக்க எவ்வளவு தொகைவேண்டும்?

**ய. வர்.** (சிறிது நேரம் யோசித்து விட்டு) ஆறு லக்ஷம் பொன் வேண்டும்.

**கோப.** (யோசித்து) யாவற்றிற்கும் ஸ்ரீஇராமர் இருக்கிறார் அவர் விஷயமாக நாம் எவ்வளவு செலவழித்தால்தான் என்ன. சரி. திம்மாஜிராவ்! நம் கஜானாவில் எவ்வளவு பொன்கள் இருக்கின்றன?

**தி. ரா.** ஏழுமை லக்ஷம் பொன்கள் இருக்கின்றன.

**கோப.** சரி. இந்தச் சிற்பியிடம் உடனே ஆறு லக்ஷம் பொன்களைக் கொடும்.

**தி. ரா.** எஜமான்! தங்கள் செய்கை மிகவும் விபரீதமாக வன்றோ இருக்கின்றது. யாருடைய பணத்தை எடுத்து யார் செலவழிப்பது? இது விஷயத்தில் கொஞ்சம் யோசனை செய்ய வேண்டும். இல்லையேல் தாங்கள் மீளாததுயரத்தில்விழ நேரிடும். மேலும் நம் தானேஷா இவ்விஷயத்தை அறிவாரானால் நம்மைத் தண்டிப்பார்.

**கோப.** உம்முடைய அபிப்பிராயம் எனக்கு வேண்டுவ தில்லை. வீணாக என் விஷயத்தில் கவலைகொள்ளாதீர். தானேஷா, இத்தருமகாரியத்தில் நான் செலவுச்செய்த பொருளை ஒப்புக் கொள்வர். உடனே பணத்தை இவரிடம் கொடும்.

**தி. ரா.** சரி! தங்களிஷ்டப்படியே செய்கின்றேன்.

**கோப.** சந்தோஷம். அன்பர்களே! நாளை என்னுடைய கிரகத்தில் ஸ்ரீ இராமநவமி உற்சவம் நடைபெறும். அச்சமயம் தாங்கள் யாவரும் வந்து, ஸ்ரீ இராமனின் கிருபைக்குப் பாத்திர ராகவேண்டும். (யாவரும் சந்தோஷத்துடன் தலையசைக்கின்றனர்.) இனி கீழே செல்லலாம். வாருங்கள். (கோபன்னா ஈசனை வணங்கிச் செல்கின்றார்.)

காக்ஷி முடிகிறது.



## அங்கம் 2. காக்ஷி 5.

---

இடம். கோபன்னாவின், அலங்கரிக்கப்பட்ட பூஜாமண்டபம்.

காலம். பகல்.

(கிருஷ்ணமாச்சாரியார், திம்மாஜிராவ், சுப்பையர், மற்றுமுள்ள பிராமணர்கள் யாவரும் வயிறார உண்டு, அமர்ந்திருக்க கோபன்னா யாவருக்கும் சந்தனம் அளித்த பின்னர், தாம்பூலமளிக்கின்றனர். அந்தணர் பலர், தாம்பூலமந்திர மோதுகின்றனர்.)

சதமானம் பவதி—சதாயுஹு:ப்புருஷஹ
சதேந்த்ரிய—ஆயுஷி!
ஏவேந்த்ரிய—பிரதிதிஷ்டதி!

**கோப.** (மந்திரம் முடிந்தவுடன்) பிராமணாளுக்கு இன்று மிகவும் சிரமம்.

**கிரு.** அடடா! பெரியவாள் அப்படிச் சொல்லக்கூடாது. தங்களுக்குத்தான் மிகவும் சிரமம். நாங்கள் யாவரும் உத்திரவு பெற்றுக்கொள்கிறோம்.

**கோப.** சரி! ஸ்ரீ இராமநவமியின் மகோற்சவம், தங்களாற்றான் இனிது நடந்தது. போய்வாருங்கள். நமஸ்காரம் (யாவரும் செல்லல்.)

**கோப.** சரஸ்வதி! சரஸ்வதி! என்ன ஆச்சரியம்! இருமுறை கூவியழைத்தும் பதிலைக்காணோம். அப்பா சுந்தரம்! குழந்தாய் சுந்தரம்!—என்ன குழந்தையின் பதிலைக்கூடக்காணோம். [உரக்க] சரஸ்வதி!

**சரஸ்.** [உள்ளிருந்து அலறி அழுதுகொண்டே] ஹா! சுந்தரம்! இனி நான் என்னடா செய்வேன்! ஐயோ! சுந்தரம்! நீ இவ்வளவு சீக்கிரத்தில் இறப்பாய் என்று நான் கனவிலும் கருதவில்லையடா. [கீழேவிழுந்து மூர்ச்சையாகிறாள்.]

**கோப.** [திடுக்கிட்டு அவளை உட்காரும்படிசெய்து] பெண்ணே! நம் பாலகன் இறந்தனனே! ஹே! ஸ்ரீ இராம. [மூர்ச்சையாகின்றார்]

**சரஸ்.** (அவரைத்தேற்றி) ஐயோ! நாதா! இதற்கோ நாம் இவ்வூருக்கு வந்தோம்!

**கோப.** ஐயோ! என்பாலன், என் அருமை சுந்தரம், எப்படி இறந்தான்?

**சரஸ்.** ஆ! கொல்லைப்புறம் விளையாடிக் கொண்டிருந்த நம் குழந்தை, சாதம்வடித்த, சூடான கஞ்சிக்குழியில் தவறிவிழுந்து இறந்தனன்.

**கோப.** எப்பொழுது இந்த சம்பவம் நேர்ந்தது? (கோவிந்தன் வந்து நிற்கின்முன்.)

**சரஸ்.** பிராமணுள் இலையில் உட்கார்ந்தவுடன் தத்தம் செய்வதற்கு மடிஜலம் கொண்டுவர நான் கிணற்றின் அருகில் சென்றபொழுது இக்கோர சம்பவத்தைக்கண்டு, திகைத்து, இவ் விஷயம் விருந்துண்ணுபவர்களுக்குத் தெரிந்தால், அன்ன முண்ணமாட்டாரே, எனப்பயந்து என் கண்மணியை எடுத்து ஒரு துணியில் சுருட்டி வெந்நீர் அறையில் வைத்திருக்கின்றேன். கண்ணே! கண்ணே! (மூர்ச்சித்து விழல்.)

**கோப.** (எழுந்து தலையில் அடித்த வண்ணம்) அடே! சுந்தரம்! நீ எங்கடா ஒளிந்திருக்கின்றாய்—(குழந்தையைப் பார்க்க உள்ளே செல்கின்றார்.)

**கோவ்.** ஆஹா! இதென்ன விந்தை! சற்றுமுன்புதானே, சமாராதனை சந்தோஷத்துடன் முடிந்தது. அதற்குள்ளாக நம் எஜமானுக்கு இத்தகைய துன்பமாநேரிடவேண்டும்.

**கோப.** [முகத்தை மூடிய வண்ணம் பிரவேசித்தல்] ஹே! ஸீதாரமணா! இதுவோ நின்கருணை. ஐயோ! பாலகனின் சரீரம் யாவும் வெந்தல்லவோ போயிற்று. (சந்நிதானத்தின் முன் சரங்குவித்து) உலகிற்கெல்லாம் உத்தமராய் விளங்கும் ஹே புருஷோத்மா! அடியார்களை ஆதரிக்கும் விமலா! அடியேனுடைய துயரத்தைத் தீர்த்தருளல் வேண்டும். பக்தவத்ஸலா! தீனபந்தோ! கருணையங்கடலே! இராமாவதாரத்தில், அயோத்தியின்கண், அந்தணர் குலத்துதித்த ஓர் குழந்தை இறக்க அதன் தாய் தந்தையர்கள் பட்ட வருத்தத்தைப் பார்த்துச் சகிக்காத கிருபா மூர்த்தியாகிய நீர், உளமகிழ்ந்து, அக்குழந்தைக்கு மீண்டும்

உயிர்கொடுத்து ரக்ஷித்தீரே? பின்னர், ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தில் உமது ஆசிரியரான சாந்தீப முனிவரின் மைந்தன் முதலையால் விழுங்கப்பெற, அவர்மனைவியின் கருத்திற்கிணங்கி, நீர் தென் திசைக்குச் சென்று திருச்சங்கத்தைச் சப்தித்து, காலனை வரவழைத்து முதலை விழுங்கிய பாலனை திரும்பவும் உயிருடன் அளிக்கச்செய்து மகிழ்ச்சியடைந்தீரே? அத்தகையஅரிய,பெரிய காரியங்களைப் பண்புடன் செய்த தாங்கள் என்மீது இரக்கங் கொண்டு என்புதல்வனுக்கும்உயிர்ப் பிச்சை அளிக்கலாகாதோ? இரகுகுலதிலகா! அபயம், அபயம்! நாயேன் தம்முடைய தாஸாதி தாஸன். வேறு கதியில்லையாதலின் உம்மையே சரணடைந் தேன். ஏழைமேல் கிருபைவைத்து, இறந்த என்பாலனை மீண்டும் உயிருடன் தந்து, தாம் பிறந்த நாளாகிய இந்நாளை நன்நாளாக்கவேண்டும். இல்லையேல் என்னையும்..........

(கருணாமூர்த்தியின் அருளால் சுந்தரம் உயிர்பெற்று ஓடி வருகின்றான்.)

**சுந்த.** அப்பா! என் அழுகின்றீர்கள்?

**கோப.** வாடா! என்கண்ணே!

**சரஸ்.** கண்ணே! சுந்தரம் (தழுவிமுத்தமிடுதல்.)

**கோவி.** (சந்தோஷத்துடன்) ஆஹா! என்னபக்தி! பரமானந்தம்.

**கோப.** கிருபாமூர்த்தியே! நினது அருட்பெருங் கருணைக்குப் பிரதியுபகாரம் செய்ய, யான் வல்லனல்லேன்.

**சுந்த.** அப்பா! எனக்குப் பசிக்கிறது.

**சரஸ்.** பிராணநாதா! இனி சந்தோஷமாய் அமுதுண்போம் வாருங்கள்.

(மூவரும் சந்தோஷத்துடன் செல்லல்)

காக்ஷி முடிகிறது.



## அங்கம். 3. காக்ஷி. 1.

---

இடம். திம்மாஜிராவின் தனி அறை. காலம். காலை.

(திம்மாஜிராவ், ஆழ்ந்த யோசனையிலிருக்க ஓர் சேவகன் பிரவேசிக்கிறான்.)

**சேவ.** கிருஷ்ணபல்லி கர்ணம் சீனிவாசஅய்யர் வந்திருக்கிறார்.

**தி. ரா.** சரி, வரச்சொல். (சேவகன் செல்ல, சீனிவாசஅய்யர் பிரவேசம்.)

**சீ. அ.** எஜமான்! நமஸ்காரம்.

**தி. ரா.** என்னங்காணும்! எங்குவந்தீர். அத்திப்பூ பூத்தாப்பலே?

**சீ. அ.** இல்லை. தங்களைப் பார்த்துவிட்டு, அத்துடன் நமது தாசில்தார் கோபன்னா, மலைமீது கட்டியிருக்கும் புது ஆலயத்தையும், இன்று நடக்கப்போகும் சேஷசயன அலங்காரக் காக்ஷியையும் பார்த்து விட்டுப்போகலாமென வந்தேன்.

**தி. ரா.** என்ன! சேஷசயனமாவது, நாக சயனமாவது, போங்காணும் போம். இந்தத்தாசில்தார் தானேஷாவின் பொருளைக் கொள்ளையடித்து கோயிலைக்கட்டி வீண்பொழுது போக்குகின்றார்.

**சீ. அ.** இவ்வொரு வருஷத்திற்குள், எவ்விதமாகத்தான், அக்கோயிலைக்கட்டினரோ! இவரிடம் ஏதோ மகிமையிருப்பதாக ஜனங்கள் சொல்லிக்கொள்ளுகின்றனரே.

**தி. ரா.** மகிமையாவது, மண்ணாங்கட்டியாவது, எல்லாம் வெறும் வேஷம். அவரைப்பற்றி நமக்கென்ன பேச்சு தலைக்கு ஆபத்துத்தானே வருது—நீர் வந்த காரியமென்ன? ரொம்ப அபூர்வமாய் இருக்கே!

சீ. அ. வராமலென்ன. நான்தான் இவ்வூருக்கு அடிக்கடி வந்துகொண்டு இருக்கின்றேனே. எஜமான் என்ன இப்படிக் கூறுகின்றீர்கள்!

தி. ரா. ஓய், இந்த அகடவிகட சாமர்த்தியமாய்ப் பேச யாரிடங்கணும் கற்றுக்கொண்டீர்? என்னையும், எனது கச்சேரி குமாஸ்தா சுப்பையர் என நினைத்துப் பேசுகிறீரோ?

சீ. அ அப்படியெல்லாம் எஜமான் என்னை நினைக்கக் கூடாது தங்கள் தயவு இல்லாமல், ஒருகாரியம் முடியுமா என்ன?

தி. ரா சீனிவாசஅய்யர்! உமது ஊரில் துவரை அதிகமல்லவா.

சீ. அ. ஆமாம். இப்போது விலையும் மலிவு.

தி. ரா. அப்படியா! ஓய் வருகிற மாதம் என் பேத்திக்கு கலியாணம் ஆகப்போகிறதே தெரியுமா?

சீ. அ. எனக்குத் தெரியாதே. வரன் எங்கே?

தி. ரா. உமக்கு, என்விட்டில், நடக்கும் விஷயங்கள் ஏன் தெரியவரும்! சுப்பையர் வீட்டில் ஏதாவது ஒரு சிறு விசேஷம் என்றாலும் தெரிந்து கொள்வீர். அவரும் உமக்கு வேண்டிய உதவியைச் செய்துவிடுவார். போங்கணும் போம். நம்மை யார்தான் இக்காலத்தில் மதிக்கின்றனர்!

சீ. அ. எஜமான் அப்படி நினைக்கக்கூடாது, தங்களை எப்படிக்காணவேண்டுமென்பதையும் அறிவேன். ஆதலின், கிராமத்திற்குச் சென்றவுடன், நல்லதுவரையாக எட்டு கலங்களை............

தி. ரா. ஓய்! நீர் எனக்காக, இவ்வளவு சிரமப்படவேண்டாங்கணும். சரி நீர் வந்த விஷயமென்ன? அதைச்சொல்லும். நான் இன்றையதினம் புதிய கோவிலுக்குப்போய், அலங்காரத்தைக் கிட்டஇருந்து செய்யவேண்டும்.

சீ. அ. எங்கள் கிராமமுன்சீப் இறந்து இரண்டு மாதங்களாகி விட்டனஅல்லவா. அவ்வேலையை என் தம்பிக்குச் செய்து கொடுத்தால்........

தீ. ரா. ஆம், ஆம். (யோசித்து) சரி. நீர் துவரை வண்டி அனுப்புவதுடன், மனு ஒன்று எழுதியனுப்பும், பின்னர் நான் பார்த்துக்கொள்ளுகின்றேன். போய்வாரும்.

சீ அ. எஜமான் தயவுவேண்டும். நமஸ்காரம் செல்லல்)

தீ. ரா. சரி, நேரமாகிறது. இனி கோவிலுக்குச்சென்று வேண்டிய காரியத்தைச் செய்வோம். (செல்லல்)

காக்ஷி முடிகின்றது.



## அங்கம். 3. காக்ஷி. 2.

இடம். பத்திராஜலத்தில் புதிய கோவில். காலம். மாலே.

(வாத்தியம் கோஷிக்கின்றது. சேஷசயனக் காக்ஷி அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. ஜனங்கள் கும்பல் கும்பலாய் நின்று தரிசனஞ் செய்து கொண்டிருக்கின்றனர். சிறிது நேரம் செல்ல, திம்மாஜிராவ், சுப்பையர், கோபன்னு, சரஸ்வதி, சுந்தரம், முதலியவர்கள் வருகின்றனர். கிருஷ்ணமாச்சாரியார் கற்பூர ஹாரத்தி எடுத்தல்.)

கோப. ஹே! ஸீதாபதே! உம்மையே யான் சரணடைந்தேன். யான் கோரிய வரத்தைப் பூர்த்தி செய்யவேண்டும்.

கி ரு. (கோபன்னுவுக்துப் பரிவட்டம் கட்டி, சடகோபம் சாத்தி மற்றயாவருக்கும் திருநீரும் திருத்துளாயும், அளித்தல்.)

கோப. (சந்தோஷத்துடன்) பெண்ணே! இனி வெளிப் பிராகாரங்களைச் சுற்றிச் செல்வோம் வா.

காக்ஷி முடிகிறது.

## அங்கம். 3. காக்ஷி. 3.

---

இடம். திம்மாஜிராவின் தனியறை. காலம். சாலை.

**தி. ரா.** (சாய்ந்த ஆசனத்திலிருந்து, சடீரென யெழுந்து) சீ! அப்படித்தான் செய்யவேண்டும். இல்லையேல் தானேஷா நம்மைத் தண்டிப்பதுடன் நம் குடும்பத்தையும் நாசம் செய்துவிடுவார். இனியும் இக்கோபன்னு செய்யும் அக்கிரமத்தைப் பார்த்துக் கொண்டிருப்பது அழகல்ல. அடதெய்வமே! நமக்கு இந்தத் தாசில்வேலை கிடைத்திருக்கலாகாதா? ஆசையிருக்கிறது தாசில்பண்ண, அதிர்ஷ்டம் இருக்கிறது கழுதைமேய்க்க. என்ன செய்வது, கொடுத்து வைத்தவர்கள் அனுபவிக்கிறார்கள்—இந்த கோபன்னுவுக்கு எவ்வளவு தைரியம்! கேவலம் ஒரு சேவகப் பயலுக்குப் பரிந்து கொண்டு, பல சமயங்களில் என்னை அவமானம் செய்தனனே. மந்திரிகள் தன் சொந்தக்காரர்கள் தானே, எனநினைத்துத் தான் எதைவேண்டுமானாலும் தைரியத்துடன் செய்யலாமென நினைத்தனன்போலும். (உலாவிக்கொண்டே) இருக்கட்டும். என்னையும் அவமானம் செய்த அம்மந்திரிகளையும் ஒரு கை பார்த்து விடுகின்றேன். கோபன்னு! உன் நெஞ்சுத் துணிவே துணிவு. தானேஷாவின் பணத்தைச் செலவு செய்யலாமா என்றதற்கு நாய் போல் என்மேல் சீறி விழுந்ததுமன்றி, பிடிவாதமாக அந்த இடிந்துபோன கோவிலையும் ரம்மியமாகக் கட்டி முடித்து, அதற்கு உற்சவமும் நடத்த ஆரம்பித்தனையே! அரசரின் பொருளான ஆறு லக்ஷம் பொன்களுக்கு என்னவழி என்று கேட்டால், "ஸ்ரீஇராமபிரான் பொருட்டுச் செலவு செய்யப்பட்டது எனக் கணக்கில் எழுது," என்கிறாயே. நீ சிரமப்பட்டுச் சம்பாதித்த பொருளாக இருந்தால் அப்பொழுது தெரியும் வருத்தம். அடடா! என்ன அநியாயம்! என்ன செலவு! ஆறு லக்ஷம் பவுன்களை அரைநொடியில் தீர்த்துவிட்டானே. ஐயோ! கேள்வி முறையற்ற கச்சேரியாய் விட்டதே. கும்பாபிஷேகமாம். ஆதிசேஷசயனமாம். மூன்றுபந்தி பிராமண போஜனமாம்! சீச்சீ! கொஞ்சங்கூட சஹிக்கவில்லையே! மகமதிய இராஜ்யம் என்பது மூளையில் இல்லாமலன்றோ அகங்கொண்டு திரிகின்றான். பாவம்! வேசியைப்பெண்டுக்கு வைத்துக்கொண்டவன் கதி போலன்றோ, நம் தானேஷாவின் கதியாயிற்று. (கோவிந்தன் பிரவேசம்) அட சனியனே! இப்பொழுது எங்கே வந்தாய்?

**கோவி.** நாளைக்குக் கடைசி உற்சவதினமானதால், ஸ்ரீ இராமச்சந்திர மூர்த்தியை, அழகிய புஷ்பங்களால் அலங்கரிக்க வேண்டுமாம். அதற்காகக் கஜானுவிலிருந்து, தன் சம்பளத்தில் ஐம்பது பொன்கள் பெற்றுக்கொண்டு கிருஷ்ண பல்லிக்குச் சென்று நறுமணமுள்ள பலவித மலர்களை வாங்கிவரும்படி தெரிவித்தார். இதோ அதற்குக் கடிதம்.

**தி. ரா.** (வாசித்து விட்டு) இது என்ன கஷ்டகாலமாயிருக்கிறது. (பெட்டியைத்திறந்து ஐம்பது பொன்உள்ள ஓர் பையைஎடுத்து) இந்தா! தொலைத்துக்கொண்டுபோ.

**கோவி.** (சந்தோஷமாக வாங்கிக்கொண்டு) போய் வருகிறேன். (செல்லல்)

**தி. ரா.** ஏய்! கோவிந்தா! நான் என் சொந்த விஷயமாக என் கிராமத்திற்குச் செல்லவேண்டும். திரும்பி வருவதற்கு ஒரு வாரமாகுமாதலால் நான் ஒரு ரஜா மனுத்தருகின்றேன். அதை எஜமானிடம் சீக்கிரம் சேர்த்து விட்டுப்போ. (ஓர் கடிதம் எழுதி கோவிந்தனிடம் அளிக்க அவன் அதை வாங்கிச் செல்கின்றான்.) சீச்சீ! கொட்டினுல் தேள், கொட்டாவிட்டால் பிள்ளைப்பூச்சியா! கூடிய சீக்கிரம் என்னுடைய பிரதாபத்தை இக்கோபன்னு அறியச் செய்யாவிடில் என் பெயர் திம்மாஜிராவ் அல்ல சரி, நாம் இனி இங்கிருக்கலாகாது. உடனே ஐதராபாத்துக்குச்சென்று, தானேஷாவிடம் இவன் செய்யும் அக்கிரமச் செயல்களை எல்லாம் எடுத்துக் கூறுகின்றேன். இனியும் இங்கிருந்தால்—இரவல்ல, பகல் அல்ல--எப்போதும் மலையின்மீது இக்கோபன்னுவுடன் உட்கார்ந்து கொண்டு உபயோகமற்ற இராமபஜனை செய்து கத்தித் தொலைக்கவேண்டும். இந்த அழகில் நாளைக்குக் கடைசி உற்சவமாம்; சீ! சீ! மனுஷன் தூங்கவேண்டாமா! சரி! நாம் இப்பொழுதே ஐதராபாத்துக்குப் புறப்பட்டுச் செல்வோம். (உடைகளை அணிந்துசெல்லல்)

காக்ஷி முடிகிறது.



## அங்கம் 3. காக்ஷி 4.

---

இடம். ஐதராபாத்தின் அரண்மனைத் தோட்டம்.

காலம். மாலை.

(தானேஷா, ஓர் தலையணையில் சாய்ந்த வண்ணம், சந்தோஷமாக ஹுக்கா பிடித்தவாறு இரத்தின கம்பளத்தின்மேல் வீற்றிருக்கின்றனர். பின்னால் சேவகன் ஓர் பெரிய, நீண்ட, விசிறியினால், விசிறிக் கொண்டிருக்கின்றான். தானேஷாவின் வலது பக்கத்தில் மந்திரிகளான, அக்கன்னா, மாதன்னா இருவர்களும், இடது பக்கத்தில் காரா ஆலியும் ஜயதேவரும் அழகிய கம்பளங்களில் வீற்றிருக்கின்றனர்.)

**தானே.** ஜயதேவ்! பத்ராஜலம் தாசில்தார் கோபன்னா சரியாகத் தன் உத்தியோகத்தை வகித்து வருகின்றாரா?

**ஜ. தே.** சரியாக உத்தியோகம் செய்து வருகின்றனர். ஆயினும், இத்தவணைக்குச் செலுத்தவேண்டிய பகுதிப்பணத்தை மாத்திரம் இன்னும் அனுப்பவில்லை.

**தானே.** என், இது வரையில் சரியாகச் செலுத்திவந்தனரா இல்லையா?

**ஜ. தே.** இதுவரையில் தவணைக்கு முன்பே செலுத்துதல் வழக்கம். ஆயினும் இத்தடவை இன்னும் அனுப்பவில்லை.

**அக்க.** ஷாஹின்ஷா! கிஸ்தி சரிவர வசூலாகாமல் இருக்கலாமென நான் நினைக்கின்றேன்.

**தானே.** அப்படித்தான் இருக்கவேண்டும். கோபன்னா ஒருபோதும் தன்வேலையில் குறை செய்யார். அவர், முன்பு நம் சபைக்கு வந்த பொழுது, என்னையும் அறியாமல், அவரிடத்தில் எனக்கு ஓர் பிரியம் ஏற்பட்டது. என்ன அடக்கம்! என்ன பக்தி! என்ன இராஜவிஸ்வாசம். (ஓர் சேவகன் பிரவேசித்தல்)

**சேவ.** ஷாஹின்ஷா! பத்ராஜலம் தலைமைக் குமாஸ்தா திம்மாஜிராவ், ஹுஸூரைக்காணக்காத்துக் கொண்டிருக்கிறார்.

**தானே.** நாளைக்குச் சபைக்கு வரச்சொல்.

**சேவ.** முன்பே தெரிவித்தேன். இராஜ்ய விஷயத்தைப் பற்றி அவசரமாகத் தங்களைக் காணவேண்டுமென்று தெரிவித்தார்.

**தானே.** அப்படியாயின் அவரை இங்கு வரச்சொல். (காவலன் செல்ல திம்மாஜிராவ் பிரவேசித்து தானேஷாவை முழங்காலிட்டு வணங்குகின்றார்.)

**தானே.** ஹோ! அச்ஹா. கியா விசேஷம்? திம்மாஜி!

**தி. ரா.** ஷாஹின்ஷா, நான் சொல்வதைத் தயவு செய்து கேட்டருளல் வேண்டும். சில வருடங்களுக்கு முன் தங்களால் பத்ராஜலம் தாசில்தாராக நியமனம் செய்யப்பட்டவரும் இதோ வீற்றிருக்கும் மந்திரிகளின் மருமகனுமாகிய கோபன்ன, தங்களுக்குச் சேரவேண்டிய ஆறு லக்ஷம் பொன்களைச் சிறிதும் பயமின்றியும் தங்கள் உத்திரவு இன்றியும், எடுத்து அவ்வூரின் மலையிலுள்ள ஓர் பாழடைந்த கோவிலைப் புதுப்பித்து அதற்கு வேண்டிய ஆடை, ஆபரணங்கள், வாகனங்கள் முதலியன யாவும் செய்து விட்டனர். மேலும் பத்துநாளாக மூன்று பந்தி திருப்தியாக, பிராமண போஜனம் வேறு நடந்தது.

**தானே.** கியா! நீ கூறுவது உண்மையா! நீயேன் அவன் செய்கைகளைக் கண்டிக்கவில்லை.

**தி. ரா.** மகராஜ்! நான் எவ்வளவோ எடுத்துரைத்தேன். அதற்கு அவர் என்னைக் கடிந்துரைத்ததுமன்றி அவமானமும் செய்தனர்.

**தா. னே.** ஆ! அவனுக்கு இவ்வளவு தைரியமா! மந்திரிகளே! கேட்டீர்களா உங்கள் கோபன்னவின் துரோகத்தை! ஆதியில் மஹா யோக்கியனைப்போல் நடந்து பின்னர் இரண்டகம் செய்ததை எண்ணிடில் என்னை அவன் ஏமாற்ற வந்தனன் என்றே நினைக்கின்றேன். அச்ஹா! அச்ஹா! காராஆலி! உடனே தோன் முஸல்மான்வீரர்களைப் பத்ராஜலத்திற்கனுப்பி அத்துரோகியிடம் ஆறு லக்ஷம் பொன்களையும் வாங்கி வரச் சொல்லும். அப்படி அவன் கொடுக்கத் தவறினல், விலங்கிட்டு உடனே

இங்கு கொண்டுவரச் சொல்லும். (கோபத்துடன் எழுந்து) ஜல்தி அதற்கு என்னுடன் வந்து உத்திரவு பெற்று அனுப்பும். (செல்ல, காரா ஆலியும், ஜயதேவும் பின் செல்கின்றனர்.)

அக்க. மாதன்ன! கோபன்ன இவ்வளவு மூடத்தனமான காரியத்தைச் செய்வானென்று நான் கனவிலும் கருதவில்லை.

மாத. அண்ணா! முன்பின் யோசியாது ஒருவருக்கு உதவி செய்தால், உதவி செய்தவர்களுக்கும், உதவியை அடைந்தவர்களுக்கும் வரும் இடையூறுகளைக் கவனித்தீர்களா! பாவி! தான் கெட்டதோடு நம்முடைய புகழையும் கீர்த்தியையும் பாழாக்கினனே!

அக்க. இனி வீட்டிற்சென்று பேசிக்கொள்ளலாம் வா. (வருத்தத்துடன் செல்லல்.)

தி. ரா. (அவர்கள் சென்றவுடன், மார்பைத்தட்டிக்கொண்டு) மமதை உற்ற மந்திரிகளே! திம்மாஜியின் பராக்கிரமத்தைப் பார்த்தீர்களா! (செல்லல்)

காக்ஷி முடிகிறது.

## அங்கம், 3. காக்ஷி. 5.

இடம். பத்திராஜலம் தாலூக்காக் கச்சேரி. காலம். முற்பகல்.

கோப. (சில கடிதங்களுக்குக் கையொப்பமிட்டுக் கொண்டே) கோவிந்தா! திம்மாஜிராவ் ஏன் இன்னும் வரவில்லை? பாவம்! ஏதோ முக்கியமான விஷயமாகத்தான் அவர் போயிருக்க வேண்டும். (திடீரென அப்ஸல்கானும் ஷாஜிகானும் பிரவேசிக்க, பயத்துடன் எழுந்து) வீரர்களே! என்ன சமாசாரம்? எங்கு வந்தீர்கள்?

அப். கா. பாய்! சலாம். இக்கடிதத்தை ஷாஹின்ஷா தும்கு கொடுத்து ஆறு லக்ஷம் பொன்கள் வாங்கிவரச்சொன்னர்.......

**ஷா. கா.** இல்லாவிட்டால், விலங்கிட்டு அழைத்துவரச் சொன்னார்.

**கோவி.** ஏய்! மரியாதையாகப்பேசு.

**கோப.** (கடிதத்தைப் படித்துவிட்டு) ஆ! மோசம் வந்ததே. ஸ்ரீ இராமச்சந்திரா! இது வரையிலும் உம்மையே யான் சரணமென்றடைந்தேன். இன்னமும் உம்மையே நம்பி உம் பொருட்டு இப்பொய்யான உடலேயும் அர்ப்பணம் செய்ய அஞ்சேன். காவலர்களே! ஆறு லக்ஷம் பொன்கள் என்னிடமில்லே. ஆதலின் மஹாராஜரிடம், உங்களிஷ்டப்படி என்னே அழைத்துச் செல்லுங்கள்.

**அப். கா.** கோபன்ன! நல்ல வேஷம் போடுகிருய். ஷாஜி! மாட்டு விலங்கை. (விலங்கைமாட்டல்.),

**கோவி.** (கோபத்துடன்) அடே! உங்களுக்கு என்ன இவ்வளவு தைரியம்! மரியாதையாக, விலங்கை எடுக்கின்றீர்களா, அல்லது உங்கள் தலைகள் உடையவேண்டுமா?

**ஷா. கா.** (வாளே உருவிக்கொண்டு) அரே பாய்! கியா சமாசாரம்? நம்பள்கிட்டே நீ பூச்சிபுடிக்கிருன். இது முஸல்மான் ஜாதி. கபர்தார்!

**கோப.** கோவிந்தா! என்ன அறியாத்தனமாகப் பேசுகின்ருய். பாவம்! அவர்கள் மேல் என்ன குற்றம். அவர்கள் மஹாராஜாவின் ஆக்ஞைப்படி நடக்கின்றனர். இதை அறியாமல், வீணே அவர்களேக் கடிந்துரைத்தல் தகாது.

**சுப்பை.** ஸ்ரீ இராம பக்தரான தங்களுக்கும் இத்தகைய கஷ்டங்கள் நேரிடவாவேண்டும். அந்தோ! இரகுஇராமா! இது உன் கருணைக்கழகோ! உத்தம பக்தரை இவ்விதம் இன்னலுறச் செய்வதும் முறையோ! இது எவர் செய்த சதியோ! அறியேன்.

**கோப.** நண்பரே! கருணை வள்ளலாகிய மாதவனை என் பொருட்டு இகழவேண்டாம். நான் பூர்வஜன்மத்தில் இயற்றிய பாவங்களே, என்னை இச்சென்மத்தில் பீடித்திருக்கின்றன. ஆதலின் அந்த ஊழ்வினைப்பயனை அனுபவித்தே தீரவேண்டும்.

என்ன ஆபத்துக்கள் வரினும், பன்னக சயனனுன, பரந்தாமன், பரிவுடன் என்னைக் காப்பார். ஆதலின் அவரை நீர் நிந்தனை செய்யாதீர். காவலர்களே! வாருங்கள் செல்லலாம்

**கோவி.** எஜமான் நான் வெளியில் சென்று தங்கள் பல்லக்கு, தீவட்டி முதலியவற்றைக் கொண்டு வருகின்றேன்.

**அப். கா.** டைரோ ! பாய்! அந்தப்பாச்சா எல்லாம் இங்கே செல்லாது. கோபன்னு சர்க்கார் பணத்தைச் செலுத்தினுலன்றி, பல்லக்கில் ஏறிவரக்கூடாது. இது ஹுஸுர் உத்திரவு.

**கோப.** கோவிந்தா! நீ பேசாமலிரு. நானேஇராஜத்துரோகியாகிவிட்டேன் பணத்திற்கு ஒரு வழியுமில்லை. மகமதியரான தானேஷாவும் என்னைத் தண்டிக்காமல் விடப்போவதில்லை. ஆதலின் அவர் உத்திரவுப்படி நடத்தலே எனது கடமையும் அவசியமும் ஆகும். [வீரர்களைப்பார்த்து] எனதன்புள்ள வீரர்களே! தயவுசெய்து தாங்கள் எனது ஓர் வேண்டுகோளுக்கு மாத்திரம் இணங்கவேண்டும்.

**ஷா. கா.** கியாவேண்டுகோள்? சொல். ஜல்தி.

**கோப.** நான் உங்களுடன் வருவதற்கு முன், ஸ்ரீ இராகவனைத் தரிசித்துவிட்டு என் புதல்வனையும், மனைவியையும், பார்த்து வர அனுமதி அளிக்கவேண்டும்.

**அப். கா.** ஆ! அது முடியாத காரியம். இந்த விஷயம் ஷாஹின்ஷாவுக்குத் தெரிந்தால் கோபிப்பார்.

**சுப்பை.** ஏ! வீரர்களே! உங்களுக்குப் பெண்டு பிள்ளைகளில்லையா? இரக்கமில்லையா! தயவு செய்து அவர்மேல் கருணைகொண்டு அவ்வொரு வேண்டுகோளை மாத்திரம் நிறைவேற்றுங்கள்.

**ஷா. கா.** கியாஜி முஸல்மானுக்கு இரக்கம் இல்லை என்னு சொல்லுறுய். இதோ பார். ஏய் கோபன்னு! உங்கள் வீட்டிற்கு நாங்கள்கூட வருவோம். நீ ஜல்தி துமாரே ஜோரு பேட்டேக்கு பார்த்து விட்டுவரவேண்டும். கியா, சொல்ருய்?

**கோப.** தங்கள் இஷ்டப்படியே செய்கின்றேன்.

**அப், கா.** அச்ஹா சலோ—சலோ (கோபன்னுவை விலங்கிட்டு அழைத்துச் செல்கின்றனர்)

காக்ஷி முடிகிறது.

## அங்கம் 4. காக்ஷி 1.

---

இடம். கோபன்னாவின் கிரகம். காலம். பகல்.

(சரஸ்வதி இராமாயணத்தைப் படித்த வண்ணமிருத்தல். சுந்தரம் அருகில் அமர்ந்து கேட்டுக்கொண்டிருக்கிருன், விலங்கினால் பூட்டப்பெற்ற கோபன்னா, வீரர்கள் தொடர பிரவேசித்தல்.)

**சரஸ்.** ஆ! பிராணபதி! இது என்ன கோலம்! (கீழே விழுகிருள்.)

**சுந்த.** அப்பா! உங்களை யார் விலங்கிட்டார்கள்?

**கோப.** குழந்தாய்! நமது மகாராஜாவின் கட்டளைப்படி, இவர்கள் என்னை விலங்கிட்டனர்.

**சுந்த.** (வீரர்களைப் பார்த்து) ஓ சாயபூ! எங்கப்பா விலங்குகளைக்கழட்டிவிடு. இல்லாவிடில், அநுமார் உங்களை அடிப்பார்.

**அப். கா.** அரே! பையன்! அநுமார் கொல்லை மரத்திலே இருப்பான். போய்ப்பார்.

**கோப.** இராமா! இராமா! சுந்தரம் உன் தாயை எழுப்பு.

**சரஸ்.** (எழுந்து) ஹா! பிராணேசா! தங்களைப்பிரிந்து, இனி யான் எப்படி உயிர்வாழ்வேன்! ஐயோ! நமது அரசர் தங்களுக்கு என்ன தண்டனை விதிக்கின்ருரோ! நீலமேகா! இதுவோ நின் சம்மதம்.

**ஷா. கா.** கோபன்னா! நாழிபாகின்றது. ஜல்தி புறப்படு.

**கோப.** இதோ வந்து விட்டேன், பக்தியிற் சிறந்த பெண்மணியே! நீ வருந்தாதே. காலச்சக்கரமானது எவ்விதம் சுழன்று, சுழன்று வருகின்றதோ அது போல் இம்மானிட வாழ்க்கைக்குச்சுகம், துக்கம், என்னும் மாறுதல் உண்டாதல் இயற்கை. எதற்கு நீ துக்கப்படவேண்டும்? நாம் சர்க்கார் பணத்தைத்

திருடி, நம் சொந்த உபயோகம் செய்து கொண்டோமா? அல்லவே. எல்லாம் அந்த இராகவனுக்கன்றோ அர்ப்பணம் செய்தோம்! ஆதலின் எவ்வித இடையூறுகள் வந்து நம்மை எதிர்ப்பினும், எம்பிரான், நம்மைக்காத்திடுவார்.

**அப். கா.** அர, ஈசனே! கியா கோபன்ன! ஜல்தி ஆவ்.

**கோப.** இதோ புறப்பட்டு விட்டேன். (குழந்தையை அணைத்து முத்தமிட்டு) குழந்தாய்! நான் ஐதராபாத்திற்குச் சென்று சடுதியில் வருகின்றேன். நீ விஷமம் செய்யாமல், இவ்விடத்திலிருந்து கொண்டு, அம்மா சொல்லுகிறபடி நடக்கவேண்டும். தெரிகிறதா?

**ஷா. கா.** (பையனை அப்பால் தள்ளிவிட்டு) ஏ! கோபன்ன! உன்கு புத்தி நை? கியா தண்டா செய்கிறாய்? ஜல்தி, ஜல்தி ஆவ்!

**கோப.** ஹா! தெய்வமே. பெண்ணே! யான் போய்வருகின்றேன். (செல்ல யத்தனித்தல்)

**சுந்த.** ஆ! அப்பா! அப்பா! நீங்கள் போகக்கூடாது.

**சரஸ்.** ஹா! பிராணநாதா! உம்மை விட்டுப்பிரிந்து நான் மாத்திரம் எப்படி உயிர் வாழ்வேன்! ஐயோ! நாதனைப்பிரிந்து பாரினில் எவ்வாறு நான் உய்வேன்.

**அப். கா.** ஷாஜி! ஷாஹின்ஷா, காஹாங்கும், டகலோ.

**ஷா. கா.** அச்ஹா, (கோபன்னவின் கழுத்தில் அடித்துத் தள்ளிப்போகிறான்,)

**சரஸ்.** நாதா, நாதா! (தொடர்ந்து சென்றுகீழேவிழுகின்றாள்.)

**கோப.** பெண்ணே! வருந்தாதே. சர்வலோக சரண்யனை மறவாதே! (செல்ல, சுந்தரம், இருகாவலர் முதுகிலும், தன்பலமுள்ளவரைக்கும், குத்துகின்றான். இரக்கமற்ற அப்ஸல்கான், அவனை வேகமாகக் கீழே பிடித்துத்தள்ள சுந்தரம், "அம்மா" என்ற சொல்லுடன் கீழே விழுகின்றான்.)

காக்ஷி முடிகிறது.



## அங்கம். 4 காக்ஷி. 2.

---

இடம். தானேஷாவின் சபாமண்டபம். காலம். காலை.

(அக்கன்னு, மாதன்னு, காராஆலி, ஜயதேவர். பிரபுக்கள், காவலர்கள், வீரர்கள் முதலியோர் புடைசூழ, தானேஷா, கோபத்துடன் அமர்ந் திருத்தல்.)

**தானே.** காராஆலி! அத்துரோகியான கோபன்னுவை இங்கு கொண்டுவரச் செய்யும். (அப்ஸல்கானும், ஷாஜிகானும், விலங்கின்றி கோபன்னுவை அழைத்து வருதல்)

**கோப.** (மண்டியிட்டு சலாம் செய்து கொண்டே) இராம்! இராம்! இராம்! ஷாஹின்ஷா! வந்தனம்.

**தானே.** பஸ். ஷாஹின்ஷா! கோபன்னு! நீர் ஏன் இத் தவணைக்குச் செலுத்தவேண்டிய கிஸ்தியைச் செலுத்தவில்லை. உம்மை வெகு நல்லவரென்றும், கெட்டிக்காரரென்றும், என்னிடம் சிபார்சு செய்த, உமது மாமன்களுக்கு நல்ல கிதாப்பு வாங்கிவைத்தீர். எங்கே பணம்?

**கோப.** அரசர் பெருமானே! தயைசெய்து கோபத்தை விடுத்து, நான் சொல்வதைக் கேட்பீர். நான் தமது பொருளை யெடுத்துத் தரும வழியிற் செலவு செய்து விட்டேன் ஆயினும் பிரபூ! என் சொந்த உபயோகத்திற்காக, நான் தமது பொருளைச் செலவு செய்யவில்லை. பகவத் கைங்கரியத்திற்குத்தானே, எனத் துணிவுடன் தம்பொருளைச் செலவிட்டுப் பத்திராலஜத்திற்கே ஓர் அணிபோல், ஸ்ரீ இராகவனின் கோயிலைக்கட்டி, உமக்கு என்றும் அழியாத புகழும், கீர்த்தியும் வரும்படி செய்திருக்கின்றேன்.

**தானே.** (கோபத்துடன் கீழே இறங்கி) அட மதிகெட்டவனே! யாருடைய பணத்தை எடுத்து யார் செலவழிப்பது! அன்னம் இட்ட வீட்டில் கன்னம் இட்டதிருடா! என்ன உத்தியோகம் நீ செய்தனை! தரித்திரம் பிடித்தமூடா! என்னுடைய உத்திரவு இன்றி, என்பணத்தைத்திருடி நீ எவ்விதம் கோவில்

கட்டலாம்? உனது தந்தை பாட்டன் தேடிவைத்த பொருளென்றோ நினைத்தாய்? என்ன! தைரியத்துடன் நிற்கின்றாய்! பாதகா! யாவற்றையும் கற்றுணர்ந்த நீ, தகாதகாரியத்தை எப்படிச் செய்ய மனம் துணிந்தனை! பணத்துக்கு என்ன வழி? ஜல்தி.

கோப. தருமமுறை தவறாததருமசீலரே! நான் என் உத்தியோகத்தைச் செவ்வனே செய்துவந்தேன். நாயேன் மனம், மாயவனிடம் ஈடுற்றதால், இக்காயம் அழிவதற்கு முன்னம், தூயகருமத்தைச் செய்ய எண்ணி, தங்களுடைய ஒரு சிறிய பொருளை எடுத்து, பகவானுக்கு, அர்ப்பணம் செய்துவிட்டேன். இடுவது பிக்ஷை பெறுவது மோக்ஷம் என்பதை நினைந்து தங்கள் பிக்ஷையைக்கொண்டு தங்களுடைய வேலைக்காரனான யான் அத்தருமத்தைச் செய்ததனால், அம்மோக்ஷம் தம்மையன்றோ சாரும். தாங்களோ மிகவும் தருமசிந்தனையுடைய தரும தாதா. மேலும் அரசர் திலகமே! நான் செலவு செய்த திரவியமானது தங்களுடைய ஒரு நாளைச் செலவுகூட ஆகாதே. அப்படியிருக்க................

தானே. வஹ்வா! வஹ்வா! (வாளை உருவ எத்தனித்துப்பின்னர் நிதானித்து.) அடவஞ்சகனே! போதும் உன்வாயைமூடு. இப்பொழுதே உன்னை இருதுண்டங்களாகச் சேதித்திருப்பேன். ஆனால் உன்னை யொத்த மோசக்காரர்களும், இராஜத்துரோகிகளும், சித்திரவதைகளை, அனுபவித்த பின்னரே இறக்கவேண்டும். புத்தியில்லாதவனே! யாரிடம் வார்த்தையாடுகின்றாய் என்பதை மறந்து, குடிகாரனைப்போல் மதிமயங்கிப்பேச, உன் நெஞ்சம் எவ்வாறு துணிவுகொண்டதடா? உத்தியோக கர்வமோ? அல்லது மாமன்மார்கள் இருக்கும் தைரியமோ?

கோப. தருமரே! இக்காயமோ அழியக்கூடியது. அப்படி அழிந்தவுடன், நம்முடைய மறுபிறப்பு, நாயோ, நரியோ, அறியோம் அதற்குள்ளாக, இவ்வரிய மானிடப்பிறவியில் நல்ல அறத்தைச்செய்து, மேன்மையடைய வேண்டுமென்று நினைத்து பத்திராஜலத்தில் எழுந்தருளியிருக்கும், பரந்தாமனுக்குப் பெருமை பொருந்திய உமது பணத்தை நான் எடுத்து ஆலயம் கட்டிவிட்டேன். உமக்குப் புகழையும் தேடிவிட்டேன். ஆதலின் பிரபோ! என்னிடத்தில் ஒரு செப்புக் காசுகூட இல்லை. தயைசெய்து.........

**தானே.** சபாஷ்! ஏய் கோபன்ன! என்னிடத்தில் கூடவா நீ வேதாந்தம் பேசுகின்றாய்! நான் முஸல்மான் ஜாதியென்பதனை மறந்தனையோ? உனது மமதையைச் சிறிது பொழுதில் அடக்குகின்றேன். அடே அறிவிலி! என் ஜாதியை எண்ணி பீதியடையாமல் இந்நீதி உரைத்து இன்னும் வாதிக்கின்றனையா! திருடனே! தனக்கு உரித்தில்லாத பணத்தைக் கூசாமல் எடுத்து வாரிச்செலவு செய்ய, உனக்கு, வெட்கமில்லை, ரோஷமில்லை, மானமில்லை? கபடனே! உடனே, குறைவின்றிப் பணத்தைத் தருகின்றனையா அல்லது, வகையின்றிச் சிறையில் தவிக்கின்றனையா?

**கோப.** பலமுடி தங்கள் அடிவணங்கப் பெறும் பார்புகழும் ஐயனே! ஐதராபாத்தின் மெய்யனே! வறியவர்களுக்குப்பரிவுடன், பெருநிதி அளிக்கும் துய்யனே! பிரஜைகள் நேசனே! பிராமணவிஸ்வாசனே! தமது தருமசிந்தனையையும், தயாள குணத்தையும் நினைத்துத் தம்மிடம் பின்னர் உத்திரவு பெற்றுக்கொள்ளலாமென நினைத்து, கோவிலைக் கட்டிவிட்டேன். ஆதலின் தார்வேந்தே! அறியாமற் நான் செய்த குற்றத்தை க்ஷமித்தருளி ஸ்ரீஇராமன் கிருபைக்குப் பாத்திரராக வேண்டுகின்றேன்.

**தானே.** (சற்று யோசித்துத் தனக்குள்) இது என்ன விந்தை! என் புத்திக்குக் கோபத்தைப் புகட்டிப்பேசிப் பார்த்தும் அது சாந்தமடைகிறதே. சீ! நீதியுடன் நாம் நடத்தல்வேண்டும். இவன் எனக்குப் புகழையுண்டாக்கிய போதிலும், அறிவிழந்து செய்த குற்றத்திற்குத் தக்கபடி சிக்ஷை செய்யவேண்டுவது அவசியம் அப்படி இவனை சிக்ஷிக்காமல், மன்னித்து விட்டால், மற்ற உத்தியோகஸ்தர்களும், தைரியத்துடன், இவன் சென்ற வழியையே பின்பற்றுவார்கள். ஆகையால் இவனைத் தண்டிப்பதே முறை. (வெளிப்படையாய்) ஏ கோபன்ன! எனக்குப் புகழ்ச்சி பெருகுவதானலும்சரி, இகழ்ச்சி வருவதானலும்சரி, அதை உன்மூலமாக யான்பெற நினைக்கவில்லை. நீ துணிவுடன் என்பொருளை எடுத்து என் உத்திரவு இன்றி செலவுசெய்தது எவ்விதத்தில் தகும்? ஏய்! நீ இருக்கிற தன்மைக்கு, நாமம் வேறு, சட்டை வேறு, தலைப்பாகைவேறு. அப்ஸல்! ஷாஜி! இவனை உடனே நமது பந்தேகானவில் வைத்து, தினந்தோறும் காலையிலும், மாலையிலும், சாட்டையால் அடித்துச் சித்திரவதை செய்யுங்கள். ஒரு மாதத்திற்குள் பொருளுக்கு வழி சொல்லாவிட்டால், கடைசி தினம், இவன் தலையை யானைக்காலால் இடறும்படி செய்யுங்கள். கொண்டுபோங்கள்.

அப் கா. அச்ஹா ஷாஹின்ஷா! ஹ—ஸ—ர் ஜேஹ—கும்.

ஷா. கா. (விலங்கைமாட்டி) சலாவ். கோபன்ன!

கோப. (மறுபடியும் தானேஷாவை மண்டிபோட்டு வணங்கி) இராம்! இராம்! இராம்!

தானே. (கோபத்துடன்) உனக்கு இராமன்வேறு—ஷாஜி! தகல்தேவ் பாராகானுக்கு (ஷாஜி கோபன்னவின் கழுத்தில் அடித்துத் தள்ளிப்போகிருன்) அக்கன்ன! ஏய் மாதன்ன! நல்ல மனிதனுக்குச் சிபார்சு செய்தீர்கள். உங்களுக்கு வெட்கமில்லை.

(கோபத்துடன் செல்ல,சபையோர் மண்டியிட்டு வணங்குகின்றனர்)

காக்ஷி முடிகிறது.

## அங்கம். 4. காக்ஷி. 3.

இடம். சிறைச்சாலை. காலம். மாலை

(ஷாஜிகானும், அப்ஸல்கானும் தூங்கிய வண்ணமிருத்தல்)

கோப. பரமகிருபாநிதியே! இக்கொடிய சிறையினில், யான் இந்த மூன்று வாரமாகப்படுங் கஷ்டங்களைப்பார்க்க, உமது மனம், இன்னுமா சந்தோஷப்படுகின்றது? அடியேன் துயருற, தாங்கள் இன்னமும் சோதனைசெய்வதழகோ! நீர் கருணமூர்த்தியாயிற்றே? பக்தர்களை ஆதரிக்கும் பரிபூரணராயிற்றே? அநாதரக்ஷகரென்ற திருநாமத்தைத் தாம் வகித்தும் துன்பக்கடலில் வீழ்ந்து தத்தளிக்கும் என்னை அன்புடன் கரையேற்ற வன்பு இல்லையோ! ஆதிமூலமே என்று ஓலமிட்டலறிய, யானையின்முன், கோலத்தோடு வந்து, அதனைச் சீலத்துடன் காத்து ரக்ஷித்த கமலக்கண்ண! முற்றும் உணர்ந்தவரும், மூவர்க்கும் முதல்வனுனவருமான முகுந்தா! நீர் என் விஷயத்தில் சற்று இரங்க வேண்டும். இராஜாங்கப்பொருளை, நான் என் சொந்த உபயோகத்திற்கு உபயோகப்படுத்திக்கொண்டேனு? தாம் என்கனவில்

தோன்றிக் கட்டளையிட்டபடி, தமக்கு ஆலயங்கட்டுவிப்பதற்கும், தம் தேவிக்குப் பாங்கான ஆபரணங்கள் சூட்டுதற்கு மன்றோ சிறியேன், அப்பொருளைப் பிரயோசனப்படுத்தினேன். இது தருமகைங்கரியமல்லவா? தர்மம் செய்பவர்களைக் கர்மத்திற்குள்ளாக்கி, நீர் வர்மம்செய்வது, என்ன மர்மமோ? ஹே! இராமா! பரந்தாமா ஜானகி இரமணா! நீரேதுணை. இராம, இராம, இராம........ (இராம நாமத்தை உரக்கச் சொல்ல, தூங்கிய காவலர் விழித்தெழுந்திருக்கின்றனர்.)

**அப். கா.** அடசத்! எளவு ராமன்! அரே ஷாஜி! இந்த கோபன்னா நம்மை உயிரோடு கொல்றான்.

**ஷா. கா.** ஆமாம் பாய்! ராத்திரி இல்லே. பகல்இல்லே. ரொம்ப கஷ்டம் பண்றான் ஏய் எளவு கோபன்னா! போதும் உன் மந்திரம் உன் வாயைமூடு.

**கோப.** அன்பர்களே! இராமதூஷணை செய்தால், உங்களுக்கு இராஜபோஷணையில்லை. ஆதலின், அன்புடன், அத்துய பெயரைச் சொல்லிக் காயத்தை, நல்வழியில் ஈடுபடச் செய்யுங்கள்.

**ஷா. கா.** ஏய். நீ ராமன், ராமன், என்கிறாயே. அது எங்கே இருக்கு? நீ அந்தக்கல்லுசாமிக்கு உதவி செஞ்சதனாலே தான், காலையிலும் மாலையிலும் வாங்றாய் தெப்பல். அரே! அப்ஸல்! இவ்வளவுநாளா என்ன உதை! என்ன அடி!—அட ஈசனே! இவனை அடிக்க அடிக்க, என்கை வலிக்கிறான்.

**அப். கா.** இவன்கு நல்ல மந்திரம் தெரிந்திருப்பான் இல்லாவிடில், காப்படி உப்பில் அரைக்கால்படி அரிசிபோட்டுப் பொங்கினசோத்தை எப்படித்தின்பான்? நேத்து, நம்ப ஷாஹின்ஷா, ஜே ஹாகும்படி தோன் நல்ல பாம்பையும், சார் நட்டுவாக்களியையும் இவன் மேலே போட்டும், இவன் செத்தான் இல்லே ப்ாய். நல்ல மந்திரம் வச்சிருக்கான்.

**ஷா. கா.** அரே! கோபன்னா! உன்னைத்தான் சாவஅடிக்கப் போராங்களே. நீ சாவரத்துக்கு முன்னாலே, நம்மளுக்கு உனக்குத் தெரிந்த மந்திரத்தை சொல்லி விடமாட்டான்?

**கோப.** அன்பனே! நான் மந்திரவாதியுமல்ல. தந்திரவாதியுமல்ல. நான் ஓர் அநாதை. எனக்கு, ஸ்ரீ இராமனின் தாரகமந்திரத்தைத் தவிர வேறொரு மந்திரமும் தெரியாது. (மந்திரிகள் இருவரும் பிரவேசிக்கக் காவலர் இருவரும் வந்தன மளித்தல்)

**அக்க.** காவலர்களே! கோபன்னாவை வெளியில் கொண்டு வாருங்கள்.

**அப். கா.** ஜேஹுகும். (கோபன்னாவைச் சிறையிலிருந்து வெளிப்படுத்தல்.)

**அக்க.** கோபன்னா! உம்முடைய செய்கை மிகவும் விசனிக்கத்தக்கதாய் இருக்கின்றது. அறியாத்தனமாக அரசர் பணத்தை எடுத்துத்தெய்வப் பயித்தியத்தை அடுத்து எங்களின் உறவைக் கெடுத்துக்கொண்டீரே.

**கோப.** இராமனுக்குச் செய்யவேண்டிய சுபகாரியத்தை யான் முடித்து விட்டேன்.

**மாத.** அது போனால் போகட்டும். இப்பொழுது அந்திவேளை வந்து விட்டது. இன்னும் ஏழு நாட்களுக்குள் பொருள் நீர்கொடாவிடில், மறுநாள் யானைப்பாகன் உமது சிரத்தைக் கொய்திடுவான். ஏழையான உம்மிடமோ பொருள் இல்லை. ஆதலால், கள்ளமின்றி, எங்கள் உள்ளக் கருத்திற்கிசைந்திடில், நாங்கள் உம்மை ஆதரித்துக் காப்போம். தமது அபிப்பிராயமென்ன?

**கோப.** மாமன்மார்களே! நியாய விரோதமின்றிய உபாயங்களைத் தூயமனத்துடன் உரைத்திடில், தங்களை, அம்மாயன் என்னிடம் அனுப்பிய நேயர்களெனப் போற்றுவேன்.

**மாத.** கோபன்னா! உம்முடைய சக்தியை யாம் அறிவோம். நீர் பன்னக சயனனின் பக்தர் ஆனபடியால், எங்கள் குலத்தின் மீது ஒரு கவிபாடுவீரேயாகில் ஆபத்திலிருக்கும் உம்மை இனியும் ஷாஹின்ஷாவின், கோபத்திற்குள்ளாக்காமல், காப்பாற்றுவோம்.

**கோப.** பேஷ் நல்லகாரியம் செய்யும்படி தெரிவித்தீர். சகல உயிர்கட்கும், இரக்ஷகனை, ஸ்ரீ இராமனைப்பாடிய நானோ அகம் உடைய மானிடரைப் போற்றிப்பாட, என்நாவுக்கு இடந்தருவேன்? என் உயிர்போயினும் தம்கருத்திற்கு உடன் படும் புத்திஹீனன் யான் அல்லன். ஆதலின் தயை செய்து இன்று போய் நான் கொல்லப்பட்ட பின்னர் வந்து எரித்திடும் என் உயிர்விட்ட உடலை. நான் ஆற்றுவாரும் தேற்றுவாரு மின்றி இறக்கச் சித்தமாயிருக்கின்றேன்.

**அக்க.** பேஷ்! வேலிக்குப் போட்டமுள் காலுக்கு வினை யாயிற்று என்பதை நன்கு ரூபித்த நமனே! தினவும், தெய்வப்பயித்தியமும், கர்வமும் பிடித்த மூடனே! யானை தன் தலைமேல், தானே மண்ணைவாரிப்போட்டுக் கொள்வதே போல், நீயே நினக்கு நெருப்பைத்தேடிக் கொள்கின்றாய். மாதன்னா! வா! நாம் இனிச்செல்லலாம். வேண்டும் இவனுக்கு இக்கதி. இத்தகையவர்களின் கதியைப்பார்த்துத்தான், மற்றைய போலி பக்தர்களும் நல்வழிக்குத்திரும்பவேண்டும். (இருவரும் செல்லல்)

**ஷா. கா.** அர திவானா! ஏண்டா உன்கு புத்தி இப்படிப் போறான். உன்னைக் காப்பாற்றவந்த மந்திரிகளை விரட்டினே நீ. அர ருத்திராக்ஷப்பில்லி! அர கடவுளே! இவன்போல் மனுஷன் லோகத்லே நை.

**கோப.** மந்திரியாய் இருந்தால் என்ன? மற்றும் மனிதரா யிருந்தால் என்ன? கடவுளின் முன்னிலையில், கண்டோர் பலரும், ஒன்றே. கேவலம் இவ்வற்ப உயிருக்கு இச்சைப்பட்டு, நடைப்பிணங்களாகிய இவ்வறிவிலிகளையோ புகழ்ந்து துதிப்பது?

**அப். கா.** அரே! உன் வாயைமூடு. உன்னையும் ஓர் மனுஷ னென்று, மந்திரிகள் வந்து உன்னிடம் பேசினரே. ஷாஜி! இவன் தோலை நாம் இப்போ உறிச்சிடுரான். சாட்டை எடுத்து ஜல்தி ஆவ்.

**ஷா. கா.** அச்ஹா பாய்! இதோ கொண்டுவரான் (இருசாட் டைகளை எடுத்துவருதல்)

**அப்.** அரே! கோபன்னா இவ்விடத்திலே நீ நிற்கிறான். நகந்தால் உயிர் போவான். கியா?

**கோப.** தங்கள் உத்திரவுப்படியே இவ்விடமே, நகராமல் நிற்கின்றேன். ஐயோ பாபம்! என்பொருட்டு இவர்கள் மிகவும் வருந்துகிறார்கள் (கண்களை மூடியவண்ணம் ஸ்ரீஇராமநாமத்தை உச்சரித்து நிற்கின்றார்—வீரர்கள். ஈஸ்வரனின் மாயையினால், கோபன்னாவின் முன்வந்து ஒருவரை ஒருவர் அடித்துக்கொள்கின்றனர்)

**அப். கா.** அரே கியா ஷாஜி! நம்மை நீ அடிக்றான்?

**ஷா. கா.** அரே கியா ஜபிட், பேசினாய். நான் எங்கே உன்னை அடிச்சான்? (மறுபடியும் அடித்தல்)

**அப். கா.** அடசத்! கியா! சொல்லச் சொல்ல அடிக்கிறே.

**ஷா. கா.** அடகழுதை! நான் ரொம்ப பொறுத்தேன் (அவன் கன்னத்தில் ஓர் அறைகொடுத்து) இப்ப கியா போல்தா?

**அப். கா** அரே பயில்வான்! நம்மளிடம், நீ குஸ்திபோடறான். இதர்ஆவ். (அவன்மேல் பாய்ந்து, யுத்தம் செய்கின்றான்.)

**கோப.** (கண்களைத்திறந்து) அன்பர்களே! என்பொருட்டு நீங்கள் போர் புரியவேண்டாம். ஸ்ரீ இராம நாமத்தை, நான் உச்சரிக்கும் பொழுது என்னைத்துன்புறுத்த உங்களால் ஆகாது. ஆதலின் தங்கள் இஷ்டப்படி, நானே என்னை அடித்துக்கொள்கின்றேன். கஷ்டமின்றிச் சாட்டையை என்னிடங் கொடுங்கள் இப்படி.

**அப். கா.** அச்ஹா! அரே! ஷாஜி! நம்ப சண்டை போடவேண்டாம். சமாதானம். சமாதானம் கொடு அவனிடம் சாட்டையை.

**கோப.** (சாட்டையை வாங்கி ஸ்ரீ இராமநாமத்தைச் சொல்லித் தன்னை அடித்துக்கொள்ள அந்த அடிகள் காவலர் மேல் வீழ்வதுபோல் தோன்றுகிறது)

**ஷா. கா.** சீ கியா! நம்ப மேல அடிவிழரான்.

**அப். கா.** அரே! கோபன்னா தூ மாரோ நை. (சாட்டையைப் பிடுங்கிக் கொள்ளல்.)

**ஷா. கா.** அரே! இவன் சாமி மந்திரம் தெரிஞ்சிருக்கான்.

**அப். கா.** பாய்! இனி, நாங்க, உன் வழிக்கு வரான் இல்லே. (காலில் விழுதல்)

**ஷா. கா.** ஆமாம் பாய்! நாங்கள் செஞ்ச தெல்லாம் நீ மறந்து விடுகிருன்.

**கோப.** நண்பர்களே! என்மேல் தங்களுக்கு உண்மையில் இரக்கம் இருக்குமாயின் நான் கேட்கும், ஒரு பொருளை மாத்திரம் கொண்டுவந்துதர வேண்டுகிறேன்.

**ஷா. கா.** கியா வேண்டும்? ஜல்தி போலோ.

**கோப.** சிறிது பாஷாணம் வேண்டும்.

**அப். கா.** உன்கு விஷம், எவ்வளவோ கொடுத்தும் நீ சாக ரான் இல்லே.

**கோப.** என் கையால், யான் விஷத்தைக் குடிப்பேனே யாகில், நான் இறப்பது நிச்சயம். ஆதலால் தயை செய்ய வேண்டும்.

**அப். கா.** அச்ஹா. ஷாஜி! இவன் சீக்கிரம் சாவாது நமக்குக் கஷ்டம் இல்லே. சீக்கிரம் ஒரு கிண்ணத்தில், விஷம் கொண்டுவா.

**ஷா கா.** இதோபோய் கொண்டுவரான். (ஷாஜி செல்ல, கோபன்னுவைச் சிறையின் உள்ளே தள்ளிப் பூட்டிவிட்டு, அப்ஸல் ஓர் மூலேயில் படுத்துத்தூங்குகின்ருன். சின்னேரஞ் செல்ல, ஷாஜி ஓர் கிண்ணத்தில் விஷத்தை எடுத்துவருகிருன்.)

**ஷா. கா.** ஏய்! இந்தா விஷம். குடிச்சிட்டு, நீ செத்துப் போனுன். வீண்சத்தம் போடக்கூடாது. எனக்கு ரொம்ப தூக்கம் வரான் (தூங்குதல்)

**கோப.** (விஷத்தை வாங்கிக்கொண்டு) சரி! இனி, என்னுல், உங்களுக்குக் கஷ்டமில்லே. நன்ருக உறங்குங்கள். (விஷக்கிண்ணத்தைக் கீழே வைத்த பின்னர் கரங்குவித்து) ஹே! இரகுநந்தனு! இன்றோடு என் வாழ்நாள் முடிவடையப்போகிறது. என் குறைகளைத் தீர்த்துக்காக்க, இன்னமும் உமக்கு மனமில்லேபோலும்.

உம்பொருட்டுச் செய்த செய்கைக்கு, யான் உபத்திரவங்களை எம்மட்டும் பொறுப்பது? சங்கு சக்கர கதாபாணி! துவாரகா நாதா! கோவிந்தா! உம்மையே சரணடைந்தேன். உம்மையே என் தந்தை என எண்ணினேன். பிரபோ! நான் இறப்பதற்கு வருந்தவில்லை! என் மனைவி மக்களை விட்டுப் பிரிவதை நினைத்துச் சிந்திக்கவில்லை! இச்சிறையில் படுந்துன்பங்களைப் பற்றிப் பயப்பட வில்லை! புகழ்பெற்ற இத்தானேஷாவின் செயலைக் குறித்து வருந்தவில்லை. ஆனல் ஒன்றை நினைக்கின் அது மாத்திரம் வருத் தத்தைத் தருகின்றது. அது யாதெனில், மாதவா! நின்னை மேன்மையான இடத்தில் வைத்துத் தாழ்மையான நாயேன், இன்னம் சிறிது நாள் பூஜிக்காமல் இவ்வாழ்க்கையிலீடுபட்டு இன்னமும் உயிருடன் இருக்கின்றேனே என்ற வருத்தமே என்னை மிகவும் வாட்டுகின்றது. ஆதலின் நான் இந்நிலமுள்ள வரை, தம்மைப் பூஜிக்கச்செய்யும். இல்லையேல், என் ஸ்வாசத்தை நிறுத்திவிடும். (சிறிது நேரம் மௌனமாயிருந்து பின்னர்) ஆண் மக்கள் எப்பொழுதும் கடின மனதுடையவர்கள். ஆதலின் பெண்கள் திலகமாகிய என் தாய் ஸ்ரீ ஜானகியைக் குறித்துப் பிரார்த்திக்கின்றேன்—என் அருமை அம்மணீ! குணபூஷணீ! தந்தை ஸ்ரீ இராமபிரானுக்கு, என்மீது அருள் பிறவாவிட்டா லும், என் தாயாகிய தங்களுக்குமா என்மீது இரக்கம் இல்லை? ஏழையான் இவ்வாறு துன்புற்று, வருந்துவது, தங்களது செவி களில் படவில்லையோ? அம்மா! சேயனைக்காப்பாற்றாத தாயும், இவ்வுலகில் உண்டோ? அம்மணீ! தாயே! பரதேவதே! அடியேனைக் காக்காவிட்டால், எளியேன் மடிவது உண்மை—என் தாயே! அம்மா! அம்மா! (மூர்ச்சித்துக் கீழேவிழுகின்றார்.)

காக்ஷி முடிகின்றது.



## அங்கம். 5. காக்ஷி. 1.

---

இடம். பத்திராஜலத்தின் புதிய கோவிலின் ஓர் பாகம்.

காலம். இரவு.

(ஸ்ரீஇராமன், அழகிய பஞ்சணையிற் சயனித்திருக்க ஸீதாதேவீ தாம் பூலம், மடித்துக்கொடுத்துக் கொண்டிருக்கிறார்)

**ஸீதை.** (திடீரென எழுந்து முன் வந்து) பொறு! கோபன்ன! கோபன்ன! நீ வருந்தாதே. உனக்கு அபயம் யான் தருகின்றேன்.

**இரா.** (சீக்கிரமே, படுக்கையை விட்டெழுந்து, ஸீதையின் இரு கரங்களையும் பிடித்துக்கொண்டு) ஜானகி! உன்செய்கை விநோத மாக அன்றோ இருக்கின்றது. பெண்ணே! அன்புடன் எனக்குத் தாம்பூலம் அளித்துக் கொண்டிருந்த நீ மின்னலைப்போல், துள்ளி எழுந்து சென்று இன்னல் உறுகின்றனையே. காரண மென்ன?

**ஸீதை.** குழந்தாய்! நீ வருந்தாதே. அந்தோ! என்னால் பொறுக்கமுடியவில்லை. என் பிராணநாதர் உனக்கு உதவிசெய்யாவிட்டால், நான் உனக்கு உதவி செய்கின்றேன். பொறு. நீ விஷத்தை உட்கொள்ளவேண்டாம். பிராணநாதா! அதோ பாருங்கள் நம் குழந்தையை. மனமுருகிச் சிறையினில் கீழே விழுந்தனன். அப்பா! அப்பா! (கீழேவிழுகிறுள்)

**இரா.** (மூர்ச்சை தெளிவித்து) வைதேகி! என்ன! உன்னையு மறியாமல் பிதற்றுகின்றனை! மெய்க்காரணத்தை, என்னிடம் நீ தெரிவித்திடில் அதற்கு உற்றவழியைச் செய்கின்றேன்.

**ஸீதை.** தேவரீர் சாந்தமூர்த்தியென்றும், பாருக்கெல்லாம் அரசர் என்றும், கருணாகரர் என்றும் எண்ணி, பூஜித்துத் தம்மையே அடைக்கலமெனப் புகுந்து, அழகிய கோவிலைக் கட்டிப் பணிந்த நம் கோபன்னவை, இந்நாள் வரையுமா துன்புறுத்துவது? பக்தர்களுக்கு அபய மளிப்பதை விட்டு, துஷ்டர்களுக்கு உதவிசெய்தால், உலகோர் உம்மிடம் எப்படிப் பக்திசெலுத்துவர்? தவிர ஸ்ரீஇராமனை நம்பியன்றோ கோபன்ன கெட்டான் என்ற வசைச் சொற்களும் உம்மைச்சாரும்.

**இரா.** பெண்ணே! அவசரப்படாதே. பூர்வஜன்மத்தின் வினைப்பயனைப்பொருத்தே, ஒருவருக்கு இன்பமும், துன்பமும் பின்னர் உண்டாகின்றன. அதேபோல், கோபன்ன ஆதியில் சில தீவினைகள் செய்திருப்பதால், இந்தஜன்மத்தில், அவற்றின்பலனை அனுபவிக்கப் பிறந்தனன். ஆகையால் அவனுக்கு நல்லவேளை வந்தவுடன், பக்தசிரோன்மணியான தானேஷாவுக்கு அவன் செலுத்தவேண்டிய, ஆறு லக்ஷம் பொன்னையும் நான்கொடுத்து ஆதரிப்பேன். கண்ணே! அதுவரை பொறுப்பாய்.

**ஸீதை.** நாதா! கடந்த ஜன்மத்தில் கோபன்ன சில பாவங்ளைச் செய்ததாகத் தெரிவித்தீர்களே. அவைகளின் உண்மையை அடியேனுக்கு அறிவிக்கவேண்டும்.

**இரா.** பெண்ணே! அவன் பூர்வ ஜன்மத்தில் முக்கண்ணனை சிவபெருமானை ஆராதித்துவந்தனன். அப்பிறவியில், ஊழ்வினைப்பயனாலும், அறியாத்தன்மையினாலும், ஓர் கிளியைக் கூண்டில் அடைத்து அதற்கு இராம நாமத்தைப் போதித்தனன். அவன் அக்கிளியைக் கூண்டில் அடைத்ததால், சிறை வாசம் செய்யவும், அதற்கு, என் நாமத்தைக் கற்பித்ததால், என்னுடைய பக்தனாகவும், இஜ்ஜன்மத்தில் பிறந்தனன். கண்ணே! நாளைக் காலையோடு, அவன் பூர்வ ஜன்மதோஷம் நிவர்த்தியாகின்றது. இனி அவனுக்கு யாதொரு கஷ்டமுமில்லை யாதலின், நீ வருந்த வேண்டாம்.

**ஸீதை.** அன்பரே! யான் இதனைக்கேட்டவுடன் அகமகிழ்ந்தேன். ஆயினும் ஓர் கிளியைக் கூண்டில் அடைத்ததற்காகவா, கோபன்ன இத்தகைய தண்டனையை அனுபவிக்கவேண்டும்?

**இரா.** கண்ணே! சகல ஜீவஜந்துக்களும், மானிடர்களும், மற்றுமுள்ளயாவும் எனக்கு ஒன்றே. கானில், அதிசந்தோஷமாகத் தன்பேடுடன் காதலோடு விளையாடிக் கொண்டிருந்த பகுத்தறிவற்ற, ஓர்கிளியைப் பகுத்தறிவுடைய கோபன்ன சிறையிலிட்டு, அதன் சந்தோஷத்தைப் போக்கியது நியாயமா?

**ஸீதை.** ஆம். நாதா! பாவம். தன் நாயகனைப்பிரிந்த அப்பெண்கிளி என்ன பாடுபட்டிருக்குமோ!

**இரா.** என்னைவிட்டு நீ பிரிந்திருந்த நாளையை நினைத்துப் பார்—உண்மை விளங்கும்.

**ஸீதை.** மன்னிக்கவேண்டும். உண்மை தெரிந்து கொண்டேன். ஆயினும் தயைசெய்து சீக்கிரமே கோபன்னவைக் காப்பாற்றலாகாதா?

**இரா.** பெண்ணே! இதோ அவ்வேளையும் நெருங்கிவிட்டது. நான் இனி பூலோகம் செல்லவேண்டும். இலக்ஷ்மணா!

**இலக்ஷ்.** (உள்ளிருந்தபடியே) வந்தேன் அண்ணா! (வேகமாக வந்து நமஸ்கரிக்கின்றான்.)

**இரா.** மங்களம்! தம்பி! நாம் ஐதராபாத்திற்குச் சென்று முதன் முதலாக, பார்வதிரமணனின் பக்தனான, தானேஷாவிடம் சென்று, பொன்னைக்கொடுத்து, இன்னலுறும் நம் கோபன்னாவை இன்றே காத்துரக்ஷிப்போம்.

**இலக்ஷ்.** தங்கள் ஆக்ஞை. அண்ணா! ஆயினும் ஒரு சந்தேகம்.

**இரா.** அனுஜா! என்ன அது?

**இலக்ஷ்.** அண்ணா! தன் சிறு வயதிலிருந்து, தம்மையே சரணடைந்த கோபன்னாவுக்கு முதன் முதல் தாம் தரிசனம் கொடாமல், தானேஷாவுக்குக் காக்ஷிதரத் தாங்கள் மனமிசைந்ததின் நோக்கமென்ன? தயைசெய்து அம்மர்மத்தை எனக்கு அறிவிக்கவேண்டும்.

**இரா.** இலக்ஷ்மணா! கூறுகின்றேன் கேள். இந்தத் தானேஷா என்பவன், பூர்வஜன்மத்திலே, சைவகுலத்திலே, தோன்றி, மறைகளை நன்கு கற்றுணர்ந்தவனாய், இந்திரன் பதவியை அடைய எண்ணித் தன் குலதெய்வமான விரிசடைக்கடவுளை உள்ளன்புடன் வழிபட்டு அவருக்கு ஒவ்வொரு தினமும், மகா புண்ணிய தீர்த்தமான கங்காஜலத்தில் ஆயிரங்குடம் எடுத்து அபிஷேகம் செய்தனன். அப்படி அவன் சிலகாலம் வணங்கியும், சிவபெருமான் அவன்முன் தோன்றாததால், ஆத்திரத்துடன் "சீ! இந்த லிங்கத்தில் ஈஸ்வரன் இல்லை" என்றுகழறிக் கோபத்துடன் தன் கையிலிருக்கும் தண்ணீர்க் குடத்தை, அப்பெருமான் தலையில் போட்டு உடைத்தனன்.

**ஸீதை.** அந்தோ! நம் முக்கண்ணனாரும் அதைப்பொறுத்தனரோ!

**இரா.** ஜானகி! கூறுகின்றேன் கேள். உடனே அந்த லிங்கத்தினின்றும் சாக்ஷாத் ஈஸ்வரன் கிளம்பி "அடே பொறுமையற்றவனே! உன் அவசர புத்தியால், செய்யத்தகாத காரியத்தைச் செய்ததனால், நீ மறுபிறப்பில் மிலேச்சனாகப் பிறப்பாய். ஆனால், ஆதியில் இந்திர பதவியை அடைய எண்ணி என்னை நீ

வணங்கினமையால், பூலோகத்தில் ஓர் சிறந்த அரசனாக விளங்குவாய். மேலும் என்னைச்சிறிது காலம் பூஜித்ததின் பலனாக, உனக்கு, ஒரு சமயம், ஸ்ரீ இராமதரிசனம் கிட்டும். அன்று முதல், உன் கீர்த்தி எப்பொழுதும், உலகின்கண் நிலைபெற்று நிற்குமாக,'' எனக்கூறி மறைந்தனர். ஆதலின் தம்பி! அப்பரமேஸ்வரரின் உறுதிமொழிப்படி, நான் தானேஷாவுக்கு, முதன் முதலில் காக்ஷி தரப்போகின்றேன்.

**இலக்ஷ்.** அண்ணா! அறிந்து கொண்டேன். இனிப்புறப்படலாம்.

**இரா.** தம்பி! நாம் இக்கோலத்துடன் அங்கு செல்ல வேண்டாம். கோபன்னாவின் சேவகர்களைப்போல், மாறுவேடமணிந்து வில்லம்புடன் செல்லவேண்டும். ஆதலின் அதற்குத் தக்க உடைகளைச் சித்தம் செய்துவா.

**இலக்ஷ்.** இதோ வந்தேன். (செல்லல்)

**ஸீதை.** காதலா! நானும் தங்களுடன் வரவேண்டாமா?

**இரா.** நாங்கள் போகும் இடங்களுக்கு நீ எதற்கு வரவேண்டும்?

**ஸீதை.** நான் வந்தால் தங்களுக்கு உதவியாய் இருக்குமே என்றுதான்.

**இரா.** கண்மணீ! இவ்விஷயத்தில் உன்னுடைய உதவி எங்களுக்கு வேண்டாம்.

**ஸீதை.** உண்மையாக வேண்டாமா?

**இரா.** வேண்டாம்.

**ஸீதை.** நன்று! உங்கள் தம்பி அதோ வருகின்றார். சீக்கிரமாகச் சென்று திரும்பி வந்து விடுங்கள். (இலக்ஷ்மணன் வருதல்)

**இலக்ஷ்.** அண்ணா! மாறு வேஷத்திற்குரிய உடைகளைச் சித்தப்படுத்திவிட்டேன். இனி புறப்படவேண்டியதுதான்.

**இரா.** இலக்ஷ்மணா! நீ உள்ளே சென்று சீக்கிரமாக ஆறு லக்ஷம் பொன்களை எடுத்துக் கொண்டு, கோபன்னாவிடமிருந்து, தானேஷா, தனக்குச் சேரவேண்டிய அந்த ஆறு லக்ஷம் பொன்களையும் பெற்றுக்கொண்டதாக, ஓர் கடிதமும் எழுதிக் கொண்டுவா. பொன்களைக் கொடுத்தபின்னர், அக்கடிதத்தில் தானேஷாவின் கையொப்பத்தை வாங்கிக்கொள்ளலாம்.

**இலக்ஷ்.** சித்தம் அண்ணா! (உள்ளே செல்லல்)

**ஸீதை.** காதலா! பாபம்! உங்களுடைய நிலைமை இப்பொழுது பரிதாபமல்லவா? ஆமாம், முன்பின் யோசியாது, ஒருவர், ஒரு வார்த்தையைத் தெரிவித்தால் அதன் பலன் என்ன?

**இரா.** இக்கேள்விக்குப் பதில், என்னைக் கேட்டுத்தான் தெரிந்து கொள்ளவேண்டுமோ?

**ஸீதை.** இல்லை நாதா! சந்தர்ப்பம் அப்படி இருக்கிறதே. (இலக்ஷ்மணன் வருதல்.)

**இலக்ஷ்.** அண்ணா! தாங்கள் தெரிவித்தபடி கடிதம் எழுதிவிட்டேன். ஆனால் பொன்கள் மாத்திரம் நிதியில் இல்லை. (ஸீதை தனக்குள் தலையை அசைத்துப் புன்னகை புரிகிறாள்.)

**இரா.** தம்பி! நீ புகல்வது ஆச்சர்யமாய் இருக்கிறதே. என்னிடத்தில், தனத்திற்குரியவளான, இதோ என்மனைவி ஸ்ரீ இலக்ஷிமிதேவியிருக்க, நிதியில் பொன்கள் எப்படியில்லாமல் இருக்கும்? பெண்மணீ! ஸீதா! கிருபைசெய்து இது சமயம் ஆறு லக்ஷம் பொன்கள் கொடுத்து உதவவேண்டும்.

**ஸீதை.** பிராணேசா! இவ்விஷயமாக என்னுடைய உதவி தங்களுக்கு வேண்டாமென்று சற்று முன்புதானே தெரிவித்தீர்கள். இப்பொழுது மறுபடியும், என்னிடத்தில் உதவி கேட்கின்றீர்களே! இது நியாயமா? இளையவரே! சகோதரரின் சாமர்த்தியத்தைப் பாருங்கள்.

**இரா.** பெண்ணே! கோபித்துக் கொள்ளாதே. நான் ஏதோ அறியாமற் பேசிவிட்டேன். தயைசெய்து இனியும் என்னைச் சோதனை செய்யாமல், நான் கோரிய பொன்னைத் தருவாய். இல்லையேல் நம் கோபன்னா இன்னமும் வருந்த நேரிடும்.

**ஸீதை.** நாதா! நானும் ஏதோ வேடிக்கையாகப் பேசிவிட்டேன். அதற்கு என்னை மன்னிக்கவேண்டும்—இதோ தருகின்றேன் பொன்களை. தயைசெய்து தங்கள் கையிலிருக்கும் சக்கரத்தைக் கொடுங்கள்.

**இரா.** பெற்றுக்கொள்.

**ஸீதை.** (வாங்கிக் கண்களில் ஒற்றிக்கொண்டு இராமர் கையில் அளித்து) பிரபோ! தங்களுக்கு எப்பொழுது பொருள் வேண்டுமோ அப்பொழுது என்னை நினைத்து இச்சக்கரத்தைச் சுழற்றுவீரேல், வேண்டிய பொன்கள் அவ்விடத்தில் கொட்டும்.

**இரா.** கண்ணே! சந்தோஷம். உன் அபிப்பிராயப்படியே செய்கிறேன். இலக்ஷ்மணா! புறப்படு. பெண்ணே! சென்று வருகிறோம். (ஸீதை வணங்க, ஆசீர்வதித்து இலக்ஷ்மணனுடன் செல்லல்.)

காக்ஷி முடிகிறது.

## அங்கம். 5. காக்ஷி. 2.

இடம். தானேஷாவின் அந்தப்புரம். காலம். இரவு.

(தானேஷாவின் அந்தப்புரம் மெழுகுவர்த்தி தீபங்களினாலும், சாம்பிராணிப்புகை முதலியவைகளினாலும், நிரப்பப் பட்டிருக்கின்றது. அழகிய பஞ்சணைக்கட்டிலில், தானேஷா, ஷேரீன், என்பவள் தொடையில் தலையை வைத்து, ரௌஸினரா அன்புடன் அளிக்கும் தாம்பூலத்தை உட்கொள்ளுகிறார்.)

**தானே.** ஆ பெண்கள் நாயகமே! இத்தகைய பெரிய ராஜ்யத்திற்கு அதிபதியாயும், உங்களை யொத்த கற்புக்கரசிகளாகிய பெண்களுக்குக் கணவனாயும் இருக்க, நான் முற்பிறப்பில் என்ன புண்ணியம் செய்தேனோ!

**ஷேரீ.** அன்புள்ள அரசே! தாங்கள் கூறுவதேபோல் நாங்களும் என்ன புண்ணியத்தைச் செய்து தமக்கு மனைவிகளாய் வந்தோமோ அறியோம்.

**தானே.** ஷெரீன்! என்னிடத்தில் உள்ள அன்பினுல், என்னை வீணாக முகஸ்துதி செய்யவேண்டாம். கண்மணி ரௌஸினரா! நீ கொடுத்த வாசனைத்தாம்பூலத்தினுல், என்மனம் என்று மில்லாதபடி இன்று மிகவும் சந்தோஷமடைந்தது. ஆதலின் தயவு செய்து ஒரு பாட்டுப்பாடு கேட்போம்.

**ஷெரீ.** அன்பரே! அடியாள் தங்களைத்திருப்தி செய்யக் காத்திருக்கின்றேன். இதோ, பாடுகின்றேன். (ஓர் பாட்டுப் பாட தானேஷா உறங்கிவிடுகிருர்.)

**ரௌ.** ஷெரீன்! குயில் போன்ற உன்னுடைய சாரீரத்தைக் கேட்டு, நம் அன்பர் துயில் போயினரே.

**ஷெரீ.** இவர் இப்படிச் செய்வாரென்று, நான்முன்பே, அறியாமற்போயினேனே. ரௌஸினரா! அவரை எழுப்புவோமா?

**ரௌ.** சீச்சீ! எழுப்பாதே, அவர் உறங்கட்டும். நாம், அந்தப் புரத்திற்குச் சென்று சயனித்துக் கொள்வோம் வா.

**ஷெரீ.** சரி அப்படியே செய்வோம்! (மடியிலிருக்கும் தலையை மெல்ல எடுத்து ஓர் தலையணையில் வைத்து, இருபெண்மணிகளும், தானேஷாவை மண்டியிட்டு வணங்கிச்செல்லுகின்றனர்.)

**தானே.** (அவர்கள் சென்ற சிறிதுநாழிகைக்குப் பின், ஓர் சனுக் கண்டு எழுந்து) ஷெரீன்! ரௌஸினரா! (எனக்கூவிப்பிரமித்து நிற்கின்ருர்.—ஷெரீனும், ரௌஸினராவும் ஓடிவருதல்.)

**ஷெரீ.** என்ன பிராணநாதா! (இடது தோளைப்பற்றிக் கொள்ளல்.)

**ரௌ.** என்ன காதலா! (வலது தோளைப்பற்றிக்கொள்ளல்.)

**தானே.** எனதாசைக் கண்மணிகளே! நான் இன்று ஓர் அதி அற்புதமான கனவு கண்டேன். அதில் இரண்டு சுந்தர புருஷர்கள் என்முன்தோன்றி மறைந்தனர். ஆஹா! அவர்களைப் போல் யான் இதுவரையிலும் கண்டதில்லை.

**ஷெரீ.** பிரியமுள்ளவரே! அவர்கள் என்னதெரிவித்தார்கள்?

**தானே.** சுந்தரமுள்ள மாதர்களே! சொல்லுகிறேன் கவனமாய்க் கேளுங்கள். ஆ! நான் அவர்களை நினைக்கும்பொழுதே என் உடல் பரவசமாகின்றது. பெண்களே! நம்முடைய கடனாளியான, கோபன்னு, நமக்கு அளிக்கவேண்டிய திரவியத்தை யாரோ முகவசிகாம் பொருந்திய இரு சுந்தரவீரர்கள் கொண்டு செலுத்திப், பின்னர், என்னிடம் இரசீது பெற்றுப் போனதாகக் கண்டேன். ஹிந்துக்கள், கனவு சில சமயங்களில், பலிக்கும் என் கிறார்களே. அது உண்மையா என்பதை இனி அறியவேண்டும். ஆ! பெண்களே! அவ்வழகிய வாலிபர்களின் அழகு, என்னை வெட்கமுறும்படி செய்தது. சரி பெண்மயில்களே! நீங்கள் இனி சென்று துயிலுங்கள் (பெண்கள் இருவரும் செல்ல, தானேஷா மஞ்சத்தில் படுத்து நித்திரைபுரிகிறார். ஸ்ரீ இராம இலக்ஷ்மணர்கள், சேவகர்களைப்போல் மாறுவேட மணிந்து திடீரென அங்குதோன்று கிறார்கள்.)

**இரா.** இலக்ஷ்மணா! திருநேத்திரராகிய உமாமஹேஸ்வரருக்குப் புண்ணிய நீரினால் அபிஷேகம் செய்வித்தமேலாகிய அருள்பக்தன் துயிலுகின்றனன். ஆதலின் இவனைச் சீக்கிரம் எழுப்பி, நாம் காக்ஷிகொடுப்போம். (அருகிற்சென்று முதுகிற்தட்டி) தானேஷா! தானேஷா! எழுந்திரும்.

**தானே.** (திடுக்கிட்டு, அவரை உற்றுநோக்கிப் பின்படுக்கையை விட்டுக்குதித்து, தன்னையும் அறியாமல் மண்டியிட்டு வணங்குதல்) ஸலாம்! ஸலாம்! ஸலாம்! (திடீரென எழுந்து) என்ன ஆச்சர்யம்! அரசனாகிய நாமே, நம்மை மறந்து இவர்களை வணங்குகிறோம். ஆ! இவர்கள் நம்கனவில் சற்றுமுன்பாகத்தோன்றிய உத்தம புருடர்களைப் போல் அன்றோ இருக்கின்றனர். பலவிதமான கடுங்காவல்களுக்குட்பட்ட, இவ்வந்தப்புரத்திற்கு, அதி தைரியத்துடன் இவர்கள் எப்படிவந்திருக்கக்கூடும்? என்ன! இவர்களைப் பார்க்கப்பார்க்க, இவர்களிடத்தில் ஓர்வித அன்புமேலிடுகின்றதே! இவர்களின் அழகும், கம்பீரமான பார்வையும் என் மனதைக் கொள்ளைகொண்டனவே! ஆ! கோடி சூர்யோதயப் பிரபை போன்ற தேகங்களும், வஞ்சியர் மயங்கும் கரிய குஞ்சிகளும், அழகிய செந்தாமரை மலர்போன்ற முகங்களும், அம் முகங்களை அழகுபெறச்செய்ய, வேலைப்போன்ற புருவங்களும், முல்லையரும்பின் வெள்ளையைப் பழிக்கும் ஒள்ளியபற்களும், பளபளவென்று ஒளிவீசும் விற்களையும் பாணங்களையும் கொண்ட கரங்களும், மிருகேந்திரனாகிய சிம்ஹத்தின் பார்

வையும் உடைய, இவ்வஞ்சா நெஞ்சத்தினர் யாவர்? தேவர்களென்பதிற்குச் சிறிதும் சந்தேகமில்லை. அதிசுந்தர வீரர்களே! என்னுடைய அந்தப்புரத்திற்குத் தந்திரத்துடன் வந்த, மந்திர புருஷர்களாகிய நீங்கள் எத்தேசம்?

**இரா.** அரசே! நாங்கள் இருப்பது, கோதாவரிக்குச் சமீபமான பத்திராஜலம்.

**தானே.** பத்திராஜலம்! வீரர்களே! உங்களைப்பார்த்தால், சேவகர்களைப்போல் தோன்றுகிறதே. நீங்கள் யாருடைய சேவகர்கள்?

**இரா.** ஆம் தாங்கள் கூறுவது உண்மை. நாங்கள் பன்னக சயனனை மறவாத கோபன்னாவின் வீட்டுக்காவலர்கள்.

**தானே.** என்ன! கோபன்னாவின் காவலர்களா? அப்படியாயின் உங்கள் குலமென்ன? மதமென்ன? பெயர் என்ன? முறை என்ன?

**இரா.** நாங்கள் சூரியகுலத்தைச் சார்ந்தவர்கள். ஸ்ரீஇராமானுஜ மதத்தை அனுசரிப்பவர்கள். என்பெயர் இராம்சிங். அவன் பெயர் இலக்ஷ்மண்சிங். நாங்கள் இருவரும் சகோதரர்கள்.

**தானே.** அச்ஹா! பொஹுத்குஷிஹை! இராம்சிங்! நீங்கள் எத்தனை காலமாக, கோபன்னாவிடம் சேவகம் செய்கிறீர்கள்? அவ்வேலைக்கு அவர் உங்களுக்கு என்ன சம்பளம் அளிக்கின்றார்?

**இரா.** எங்கள் தலைமுறைதத்துவமாக நாங்கள் அவரிடம் உத்தியோகம் செய்கிறோம். அவர் எங்களிடம் கொண்டிருக்கும் அன்பே எங்களுக்குத் திருப்தியான சம்பளம்.

**தானே.** இராம்சிங்! இலக்ஷமண்சிங்! சகல கட்டுக் காவல்களையும் கடந்து அதிதைரியத்துடன் எதற்காக இங்கு வந்தீர்கள்?

**இரா.** கோபன்னா தங்களுக்குச் செலுத்தவேண்டிய பொன்னைத் தங்களிடம் அளிக்கும்படி அவர்மனைவி சரஸ்வதிதேவிகூற யாங்கள் ஓடோடியும் வந்தோம்.

**தானே.** எனக்குச் செலுத்தவேண்டிய முழுத்தொகையும் கொண்டு வந்தீர்களா? அல்லது பாதித்தொகை வைத்துக் கொண்டு கடன் சொல்ல நினைத்தீர்களா?

**இலக்ஷ்.** ஏ! தானேஷா! ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு, என்பதை இன்னமும் நீர் அறியவில்லை. நீர் இப்பொழுது யாரிடம் சம்பாஷிக்கின்றீரென நினைத்தீர்? வீண் வார்த்தைபேசி, உமது மாண்பை வீண்படுத்த யாம் இங்கு வந்தோம் அல்லோம் என்பதை தமது உள்ளத்தில் இறுத்திப்பேசும்.

**இரா.** அவசரப்படாதே! தம்பி இலக்ஷ்மணா!

**தானே.** கியா! இலக்ஷ்மணரா!

**இரா.** ஆம்! இலக்ஷ்மண்சிங்.

**தானே.** ஹோ! இலக்ஷ்மண்சிங். என்ன ஐயா! கோபிக்கின்றீர்! கையில் பொருள் இன்றி இங்கு வந்ததுமின்றி, வீண் வார்த்தைகள் சொல்லி, என்னை ஏசுகின்றீரே. சீக்கிரம் ஆறு லக்ஷம் பொன்னைக் கொடும். இல்லையேல், உங்கள் இருவரையும், கதறும்படி அடித்திடுவேன்.

**இலக்ஷ்.** (கோபத்துடன்) அரசரே! உமது நாவைத் துண்டித்து........

**இரா.** தம்பி! இதுஎன்ன! பொறு! தானேஷா! உமது பணத்திற்குச் சரியான மோகராக்களை இபபொழுதே தருகின்றேன் பாரும். (திடீரென தானேஷாவின் பின்புறம் போய் நின்று தனது சக்கரத்தை எடுத்து) ஹே! ஸீதாலக்ஷ்மி! உன் அருள்படி இதோ இச்சக்கரத்தைச் சுழற்றுகின்றேன். தாமதமின்றி நீ இத்தருணம் பொன்னை அளிப்பாய். (சக்கரத்தைத் தன் தலைக்கு மேல் சுழற்ற, மேலிருந்து கணக்கில்லாத மோகராக்கள் வீழ்கின்றன—தானேஷா பிரமித்துக் கீழே வீழ்ந்து, ஸ்தம்பிக்கின்றார். இலக்ஷ்மணர், கோபத்துடன் புன்னகைபுரிகிறார்—மோகராக்கள் யாவும் விழுந்தவுடன்) தானேஷ்! அதோ உனக்குச் சேரவேண்டிதொகை.

**தானே** (திடீரென ஓடி, மோகராக்களைக் கைநிறையவாரிப் பார்த்துக் கீழே எறிந்துவிட்டு) பர்வர்திகார்! எல்லாம் மோகராக்கள்! ஓ! இராம்சிங்! இவ்வளவு மோகராக்களை யார் எண்ணுவது?

இலக்ஷ். வீண்வார்த்தை வேண்டாம். கோபன்னு தமக்குச் செலுத்தவேண்டிய பணத்திற்குமேல் இக்குவியலில் இருக்கின்றது. சந்தேகமுண்டானால் எண்ணிப்பார்த்து ஜல்தி ரசீது கொடும்.

தானே. (மிக்க பயத்துடன்) ஆ! இவர்கள் ஸ்ரீஇராம இலக்ஷ்மணர்கள், என்பதிற் சந்தேகமேஇல்லை. சக்கரத்தைக் கண்டபொழுதே அறிந்து கொண்டேன். ஆதலின் இவர்களை உபசரித்து, பின்னரே, அனுப்பவேண்டும். ஓ! புருஷோத்தமர்களே! இதோ இவ்வழகிய ஆஸனத்தில் அமருங்கள். உங்களுக்குப் பன்னீர் தெளித்து, சந்தனம் அளித்து, பொன் ஆடை ஆபரணங்கள் தரித்து, பின்னர் இரசீது கொடுத்து அனுப்புகின்றேன்.

இலக்ஷ். ஏ! தானேஷா! எங்கள் கோபன்னுவை, பணத்தின் பொருட்டு, இவ்விதம் சித்திரவதை செய்தீர் ஆதலின் உம்மிடம் இனி நில்லோம். சிறிது சுண்ணும்பும் ஏற்கோம். சீக்கிரம் அனுப்பும் எங்களை.

தானே. வீரர்களே! என்னை மன்னிக்கவேண்டும். கோபன்னுவின் பெருமையை அறியாது நான் அவருக்கு இன்னல் விளைவித்து விட்டேன்.

இலக்ஷ். சரி. சரி! சீக்கிரம் பணத்திற்கு இரசீது தாரும். நாழிகையாகின்றது.

தானே. ஆ! இலக்ஷ்மண்சிங்! இரசீது அளிக்கக் காகிதம் இங்கு இல்லை. ஆதலின் காலைவரை தயைசெய்து இங்கு இருங்கள். பின்னர் இரசீது தருகின்றேன்.

இலக்ஷ். மாசற்றமன்னு! உம்முடைய நிலைமையை நன்கு அறிந்தே, நீர் பணம் பெற்றுக்கொண்டதாக யாம் ஓர் கடிதம் எழுதிக்கொண்டு வந்திருக்கின்றோம். ஆதலின் இதில் உமது கையொப்பத்தை மாத்திரம் போட்டுக்கொடும்.

தானே. எழுது கோலும், மையும் இவ்விடத்தில் இல்லையே. சற்று உட்காருங்கள். உள்ளே போய் வெகு சீக்கிரத்தில் அவைகளை எடுத்து வருகின்றேன்.

இரா. நாங்கள் சீக்கிரம் போகவேண்டும் இல்லாவிட்டால் கோபன்னு துயருறுவார். ஆகையால், நீர் தாம்பூலந்தரித்து உமிழ்ந்த பாத்திரத்தில் இருக்கும் உச்சிஷ்டத்தில், உமது விரலை நனைத்து, இதில் கையெழுத்திட்டுக்கொடும்—தம்பி! கடிதத்தை அவரிடம் கொடு.

தானே. (இலக்ஷ்மணனளித்த காகிதத்தைப் பெற்று, உச்சிஷ்டத்தைக்கொண்டு, தன் விரலால் கையெழுத்திட்டு இராமனிடம் அளித்து) இராம்சிங்! தயைசெய்து இன்று இங்கு இருந்துவிட்டு நாளை செல்லலாகாதா?

இரா. தானேஷா! நாளை செல்லும் வேளை இதுஅல்ல. போய் வருகின்றோம்.

தானே. (மண்டியிட்டு அவர் காலைப் பிடித்துக்கொண்டு) தாங்கள் செல்லலாகாது—செல்லலாகாது உங்களை விடமாட்டேன்.

இரா. (புன்முறுவலுடன், தன் கரங்களை உயர்த்தி ஆசீர்வதிக்க தானேஷா மயங்கிக் கீழேவிழ, இலக்ஷ்மணர் அவனைத் தாங்கிக் கீழே வைத்து விடுகின்றார்.) இலக்ஷ்மணா! சிவபெருமானின் பக்தன் உறங்கிவிட்டான். இனி ஒரு தடையுமின்றி, சிறைதனில் பரிதவிக்கும் நம் கோபன்னாவிடம் செல்வோம் வா. (இருவரும் ஓடுதல்)

தானே. (சிறிது நேரஞ்சென்று பயித்தியம் பிடித்தவர்போல் எழுந்து இராம இலக்ஷ்மணர் நின்ற இடத்தை உற்றுக்கவனித்து) ஆ! மறைந்து விட்டனரே! ஓ! இராம்சிங்! ஓ! இலக்ஷ்மண்சிங்! ஐயோ! பதிலைக்காணோமே. (முகத்தையும் தலையையும் கசக்கிக் கொண்டு) இராம்சிங்! எவ்விடத்தில் இருக்கின்றீர்? காணவில்லையே! ஆ! என்னை ஏமாற்றிச் சென்று எவ்விடமோ ஒளிந்து கொண்டிருக்கின்றீர். இதோ இப்பொழுதே உம்மைக்கண்டு பிடித்திடுவேன். (ஓர் தூணைப்பார்த்து) அச்ஹா! இராம்சிங்! இங்கேயா நிற்கிறீர். (ஓடித்தூணைப்பிடித்துக் கீழேவிழுந்து எழுந்து) ஆ! ஓடிவிட்டனரே. (மறுபுறம் திரும்பி ஓர் தூணைப் பார்த்து) ஏ பாய்! இலக்ஷ்மண்சிங்! இங்கேயா ஒளிந்திருக்கிறீர். இதோ வந்து விட்டேன்! (ஓடித்தூணைக்கட்டிப் பிடித்து அடிபட்டுக் கீழேவிழுந்து உரக்க) ஓ! இராம்சிங்! ஓ இலக்ஷ்மண்சிங்! ஆவ்! ஆவ்! (கீழேவிழுந்து மூர்ச்சிக்கின்றார். ஷேரினும், ரௌஸினாராவும் ஓடி வருகிறார்கள்.)

ஷேரீ. ஆ! எனதரசே! அக்கா! இதற்கென்ன செய்வது?

**ரேள.** கொஞ்சம் முகத்தில் பன்னீர் தெளித்து விசிறுவோம். (ஷேரீன் பன்னீர் தெளித்து விசிற, தானேஷா திடீரென எழுந்து பீதியடைந்தவர்போல் காணப்பட, ஷேரீனும், ரேளஸினராவும் பிரமித்து நிற்கின்றனர்.)

**தானே.** (எழுந்து ரேளஸினராவை ஸ்ரீஇராமன் எனநினைத்து) ஹே இராம்சிங்! இவ்விடத்திலா நிற்கின்றீர்! (சிரித்தல்) இனிமேல் ஓடாதிர். அப்படியே நில்லும், உமக்குச் சந்தனம் தருகின்றேன். பட்டாடை கொடுக்கின்றேன். உம்மை வணங்குவேன். (ரேளஸினராவின் காலைப்பிடித்து) என்னிடம் அகப்பட்டுக்கொண்டீரா!

**ரேள.** (ஆச்சர்யத்துடன்) பிராணநாதா! என்ன! வேடிக்கையா செய்கின்றீர்கள். நான் யாரென்பது கூடத்தெரியாமல், என் கால்களைப் பிடிக்கலாமா—என்னை உற்றுப்பாருங்கள். நான் தங்கள் மனைவி ரௌஸினரா அல்லவா?

**தானே.** (கோபத்துடன் அவளைக் கீழேதள்ளி) சீ! ஓடிப்போ இவ்விடத்தைவிட்டு. ஆ இராம்சிங்! ஆ இலக்ஷ்மண்சிங்! எங்கே மறைகின்றீர்கள்? (மறுபக்கம் நிற்கும் ஷேரீனை இலக்ஷ்மண்சிங் என நினைத்து) ஓ இலக்ஷ்மண்சிங்! நீர் அகப்பட்டுக்கொண்டீர். தயை செய்து என்மேல் முன்போல் கோபித்துக் கொள்ளாமல் சற்றுட் காரும். உமக்கு நல்ல வெகுமதியளிக்கின்றேன். [ஷேரீன் அருகில் சென்று, அவள் இருகரங்களையும் பிடித்து இழுக்கின்றார்.] ஆவ்! இலக்ஷ்மண், ஜல்தி ஆவ்.

**ஷேரீ.** பிரபு! நான் இலக்ஷ்மண்சிங் அல்ல. தங்கள் இரண்டாவது மனைவியான ஷெரீன் அல்லவா. இதையறியாமல், என்னையும் அக்காள் ரௌஸினராவையும், துன்புறுத்தி ஏன் இப்படிப் பயமுறுத்துகின்றிர்கள்?

**தானே.** நீங்கள்—நீங்கள்—இராம்சிங்— ஷெரீன்— ரௌஸினரா—சீச்சீ! மூதேவிகளா! ஓடுங்கள் இவ்விடத்தைவிட்டு. எனக்கு நீங்கள் வேண்டாம். [பயித்தியம் பிடித்தவர்போல் நான்கு புறங்களும்பார்த்து விட்டு உரக்க] அரே! பாய் இராம்சிங்! ஏ இலக்ஷமண்சிங்! ஆவ்! ஆவ்! ஆவ் (கீழேவிழுந்து மூர்ச்சையடைகின்றார்.]

**ஷெரீ.** அக்கா! இனி நாம் சும்மா இருக்கலாகாது. உடனே நமது சேடியிடம் தெரிவித்து மந்திரி பிரதானிகளை அழைத்து வரச்சொல்.

**ரேள.** இதோ சொல்லிவருகின்றேன். (ஷெரீன் மறுபடியும் பன்னீர் தெளித்து விசிறுகிறுள். ரேளஸினரா பிரவேசம்.)

**ரேள.** ஷெரீன்! நமது பிரதான மனிதர்களை யெல்லாம் உடனே அழைத்து வரும்படி தெரிவித்து வந்தேன். அவர்களும் அதிசீக்கிரம் வந்துவிடுவார்கள். ஆ! நம்காதலர் விழித்துக் கொண்டார். பிராணபதி! அபலையான எங்களை இவ்வாறு வருந்தச்செய்வது உமக்கு அழகா?

**தானே.** (கண்விழித்து மெல்ல உட்கார்ந்து கொண்டு) ஷெரீன்! சிறிது பானம் கொடு. (ஷெரீன் மேஜையின்மேல் வைத்திருக்கும், ஓர் பாத்திரத்திலிருந்து சிறிது பானத்தை ஓர் கிண்ணத்தில் ஊற்றிக் கொடுக்க, அதைக் குடித்து எழுந்து ஒரு ஆசனத்தில் அமர்ந்து) பெண்களே! இனி அச்சுந்தர புருஷர்களைக்காண்பேனு--கோபன்னு! என் மன்னு! நீயே பக்திமான். ஆ! இது என்ன விந்தை! அதோ என் பிரதானிகளெல்லாம் இங்கு வருகின்றனர். பெண்களே! இனி நீங்கள் உள்ளே செல்லுங்கள். (அக்கன்னு, மாதன்னு, காராஆலி, ஜயதேவ், அரண்மனே வைத்தியர் முதலியோர் பிரவேசித்து தானேஷாவை மண்டியிட்டு ஸலாம் செய்கின்றனர்.) அக்கன்னு! உங்களை யார் இங்குவரச்சொன்னது?

**அக்க.** ஷாஹின்ஷா! தாங்கள் திடீரென மயக்கம் அடைந்ததாக, அந்தப்புரத்திலிருக்கும், தங்கள் மனைவிகளிடமிருந்து சமாசாரம் வந்தது. ஆதலால் தங்களைப் பார்த்துப்போக வந்தோம். தெய்வச் செயலாய்த் தாங்கள் சௌக்கியமாய் இருப்பதைப் பார்க்க, எங்களுக்கு மிகவும் சந்தோஷம்.

**தானே.** சந்தோஷம். நண்பர்களே! எனக்கு ஏற்பட்டது மயக்கமல்ல, ஏக்கமே. ஆ! நான் என்ன சொல்வேன். அன்பர்களே! இன்று தெய்வத் தன்மை பொருந்திய ஓர் சம்பவத்தைக் கண்டேன். பக்திகொண்டேன். அதனுல் பிரமை கொண்டேன்.

**கா-ஆ.** கியா விசேஷம் ஷாஹின்ஷா?

**தானே.** பிரதானிகளே! [மோகராக்கள் கிடக்கும் இடத்தைச் சுட்டிக்காட்டி] அதோ பாருங்கள்.

ஜ. தே. (அருகிற்சென்று பார்த்து) மோகராக்களல்லவோ கொட்டிக்கிடக்கின்றன. ஷாஹின்ஷா! இதன் தாத்பரியம் என்ன?

தானே. பிரியர்காள்! நான் உறங்கிக் கொண்டிருக்கும் சமயம் வில், அம்பு, சக்கரபாணிகளாய் ஸ்ரீ இராம இலக்ஷ்மணர்கள், சேவகர்களைப்போல் மாறுவேடமணிந்து கொண்டு, இவ்விடத்தில் மாயமாகத் தோன்றி, மகாபக்திமானும், வரப்பிரசாதியுமான, ஸ்ரீ கோபன்னு என்னும் பெரியாரைக்காக்கும் நிமித்தம் எனக்குச் சேரவேண்டிய பொருளைக் கொடுத்து என்னிடமிருந்து தாம்பூல உச்சிஷ்டத்தில் கையெழுத்திடப்பட்ட, ரசீதையும் பெற்றுக்கொண்டு, என்னை மயக்குவித்து மறைந்து விட்டனர். அவர்களைப் பார்த்தது முதல், என்மனமானது ஓர்வித பிரமை அடைந்து அவர்களிடத்திற் ஈடு பட்டுவிட்டது. ஆ! கொடைவள்ளல் ஆகிய கோவிந்தன் பக்தரான கோபன்னுவுக்கு அபராதியானேனே. நண்பர்களே! அதோ கிடக்கும், பொன் காசுகளையெல்லாம், ஒன்று விடாமல் முதலில் திரட்டி ஓர் மூட்டையாகக் கட்டி இங்கு கொண்டுவாருங்கள். (யாவரும் அவைகளைப் பொறுக்கி ஓர் பையில் கட்டி தானேஷாவின் முன்பு வைக்கிறார்கள்.) சந்தோஷம். சரி! யாவரும் வெளியில் போய் இருங்கள். நான் ஸ்ரீ இராம பக்தரைப் பார்க்கச் சீக்கிரமாக வருகின்றேன். அக்கன்னு! நீர் முன்னதாகச் சிறைச்சாலைக்குச் சென்று, அவரை விடுவிப்பீர்.

அக்க. உத்திரவு ஷாஹின்ஷா. (வணங்கிச் செல்லல். தானேஷா உள்ளேசெல்ல, மற்றுமுள்ளோர் வெளியே காத்திருக்கின்றனர்.)

காக்ஷி முடிகிறது.

---

## அங்கம் 5. காக்ஷி 3.

இடம். சிறைச்சாலை காலம். நள்ளிரவு.

(ஷாஜிகானும், அப்ஸல்கானும், உறங்கிக்கொண்டிருக்கின்றனர். கோபன்னு கைவிலங்குடன் மூர்ச்சித்திருக்கின்றார். இராமலக்ஷ்மணர்கள் பிரவேசித்தல்.)

இரா. இலக்ஷ்மணா! இதோ நமது பக்தன் சிறையில் விலங்கிடப்பட்டு, நம்மை நினைந்து வருந்தி, சோர்ந்து நித்திரை புரிகின்றான். நாம் இன்னும் சற்றுநேரம் தாமதித்து வந்திருப்போமானால், தன்கையில் இருக்கும் விஷத்தைக் குடித்திடுவான்.

சீக்கிரமாக உட்சென்று, அவன் விலங்குகளைக் கழற்றிவிட்டு, விஷத்தைக்கீழே ஊற்றிவிட்டு, அக்கிண்ணத்தில், தானேஷா விடமிருந்து நாம் பெற்றுவந்த, ரசீதை நன்றாக மடித்து வைத்து வா.

**இலக்ஷ்.** ஆக்ஞை அண்ணா!(சிறையின் கதவுகள், இலக்ஷ்மணர் கரங்கள் பட்டவுடன், திறக்கின்றன உள்ளே சென்று ஸ்ரீ இராமர் தெரிவித்தவண்ணம் செய்துமுடித்துப்பின்னர் வெளியில் வந்து கதவுகளை மூடிவிடுதல்)

**இரா.** இலக்ஷ்மணா! நாம் இனி இங்கு மறைந்திருந்து, நடக்கும் வேடிக்கைகளைப் பார்த்து விட்டுப் பத்திராஜலம் செல்வோம். (கோபன்னாவைப் பார்த்து) உத்தமர் புகழும் பக்தனான ஏ கோபன்னா! இனி நீ என்னுடையதாஸன் என்பதை உலகோர் நன்கு அறிவாராதலின், உனக்கு, **ஸ்ரீ இராமதாஸர்** என்று பெயர் வழங்குவதாகுக. இனிகவலைவிடுக. (இருவரும் மறைதல்)

**கோப.** (சடுதியில்எழுந்து) ஆ! யார் என்னை இராமதாஸர் எனப் பெயரிட்டுக் கூப்பிட்டது? இதென்ன! என்கைவிலங்குகள் கழற்றப்பட்டிருக்கின்றன! காவலர்களோ உறங்குகின்றனர்! ஒன்றும் புரியவில்லையே! ஸ்ரீஇராகவா! இன்னமுமா என்னைச் சோதனை செய்கின்றீர்! சீ! நாம் இன்னும் இச்சிறையிலிருந்து கஷ்டப்படுவதைவிட, நம் உயிரை மாய்த்துக்கொள்வதே நலம். ஆதலின் காவலர்கள் அன்புடன் அளித்த விஷத்தைக் குடித்து மடிவோம் (விஷக்கிண்ணத்தைக் கையில் எடுத்துவைத்துக் கொண்டு) ஹே! ஜயஇராமா! பட்டாபி இராமா! கோசலை இராமா! இந்நாள் பரியந்தம், தம்மை வேண்டியும், என்னைப் பாராதிருத்தல், உமக்கு அழகோ! ஹே! ஸீதா இராமா! உமது மனைவி ஸீதைமேலும், தந்தை தசரதர்மேலும், தாய் கோசலை மேலும், குலகுரு வசிஷ்டர் மேலும், தம்பி இலக்ஷ்மணன் மேலும், நீர் கையில் பிடித்திருக்கும் கோதண்டத்தின்மேலும், உம்தூய திருவடிகளின்மேலும், ஆணையிட்டுச் சொல்கின்றேன். என்னை நீர் காக்கவேண்டும். இல்லையேல் "தீன சம்ரக்ஷகர்" என்ற நாமத்தைத்தாம் வஹிக்கத்தகாதவர் ஆவீர் (யோசித்து) சீச்சீ! என்ன முட்டாள் தனமான செய்கையைச் செய்தோம். ஆ! நான் படுங்கஷ்டத்தை எண்ணி, மகாபரிசுத்தமான என் அருமை ஸ்ரீ இராமச்சந்திர மூர்த்தியின்மேல், எவ்வளவு ஆணைகள் இட்டு, அபராதியானேன்! ஹே! ஸீதா இரமணா! ஹே!

கல்யாணஇராமா! நாயேன் அறியாமற்செய்த குற்றத்தை க்ஷமித் தருளவேண்டும். நான் செய்த ஒவ்வொரு ஆணையையும், நான் மீட்டுக்கொண்டு, இவ்விஷத்தைப் பருகுகின்றேன். இதோ, எலும்பு, நரம்பு, தோல், முதலான ஆபாசக் களஞ்சியமாகிய இப்புலால் வீட்டைவிட்டு வருகின்றேன். ஹே இராமா! கிருபைசெய்து என்னை நின்திருவடி நிழலிற்சேர்த்துக் கொள்ள வேண்டும். இந்தப்பிறப்பிலே எனக்கு நின்திருவடி கிடையா தானால் மறுபிறப்பிலாயினும், கிடைத்தற்கரிய நல்லறிவும், பேரன்பும் உள்ளவனாகப் பிறப்பிக்கவேண்டும். பிரபூ! இதுவே நான் உம்மைக் கடைசியாக வேண்டிக்கொள்வது. இதோ இவ் விஷத்தைக் குடித்து, இப்பாழும் உயிரைப்போக்குகின்றேன். இராம்! (விஷத்தைவாயில் ஊற்ற ஓர் கடிதம் வீழ்கின்றது) ஆ! இது என்ன ஆச்சர்யம்! விஷத்திற்குப் பதிலாக ஓர் கடிதம் விழுகின் றதே (கடிதத்தைக்கையில் வைத்துக்கொண்டு) காவலர்களே! காவ லர்களே!

**அப். கா.** (எழுந்து) அடசத்! ஏன்கூப்பிடரே.

**கோப.** அப்பா! எனக்கு விஷம்தருகின்றேன் எனத் தெரிவித்து விட்டு, வெறுங்கிண்ணத்தில், ஓர் கடிதத்தை வைத்தா கொடுப்பது? இது தங்களுக்கு ஞாயமா?

**அப். கா.** (ஷாஜியை எழுப்பி) கியாஜி! ஷாஜி! கோபன்ன வுக்கு விஷம் தராமே, கடுதாசு குடுத்து ஏமாத்தினே நீ?

**ஷா. கா.** அரே! பாய் எனக்கு ஒன்றும்தெரியாதே! நான் விஷம்தானே கொட்டேன். என்ன கோபன்ன! நம்பள்கிட்ட ஜூட் பேஷ்ரே.

**அப். கா.** ஏய்! கோபன்ன! கியா கட்தம்? படி நீ.

**கோப.** இதோ படிக்கின்றேன். (படித்தல்)

பத்திராஜலம் தாலூக்கா தாசில்தாரிடமிருந்து, அவர் அனுப்பிய சேவகர்கள் மூலமாக, நமக்குச் சேரவேண்டிய ஆறு லக்ஷம் பொன்களை யும் இன்று பெற்றுக் கொண்டோம்.

தானேஷா.

**அப். கா.**
**ஷா. கா.** } கியா?

**கோப.** (பரபரப்புடன்) இது என்ன விந்தை! ஸ்ரீ இராகவன் தான் நம்மீது இரங்கி, இவ்விதம், உதவிசெய்தனரோ?

**ஷா. கா.** அப்ஸல்! பாரா ஹுஷார்.

**அப் கா.** அச்ஹா! ஷாஜி (காவல் ஜாக்கிரதையாகச் செய்கின்றனர். அக்கன்னு வர காவலர் மண்டியிட்டு வணங்குகின்றனர்.)

**அக்க.** ஷாஜி! ஜல்தி கதவைத்திற.

**ஷா. கா.** (கதவைத்திறக்க, கோபன்னு வெளிவர மந்திரி பிரதானிகள் தொடர தானேஷா திடீரென ஓடிவந்து வணங்குகின்றனர். கோபன்னுவும் வணங்குகின்றனர். சபையோர் யாவரும் வணங்குகின்றனர்.) இராமதாஸரே! மகா அபலையான என்னைக்காப்பாற்றி மன்னியும். நான் பாவி, அபராதி, புத்தியீனன், மூடன்.

**கோப.** பிரபோ! பிரபோ! தாங்கள் கூறுவது எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே. என்னையோ தாம் வணங்குவது? அரசராகிய தம்மை நான் அன்றோ வணங்கவேண்டும்.

**தானே.** கோபன்னு! என் அன்பரே! இராமதாஸரே! பரந்தாமன் நேசரே! என்னை மன்னியும். நீர், தெய்வத்தன்மை பெற்ற மகா உத்தம சிரேஷ்டர். உம்பொருட்டே, ஸ்ரீ இராம இலக்ஷ்மணர்கள், சேவகர்கள் உடையுடன், என்னிடம் வந்து, பொன் ஈந்து, இரசீது பெற்றுப் போயினர். ஆதலின் பக்தியிற் சிறந்தவரே! உம்முடைய பக்தியின் சக்தியை அறியாமல், தங்களுக்குச் செய்த இடையூறுகளை அறவேமறந்து, எனக்கு உற்ற உண்மைமார்க்கத்தின் வழியினைக்காண்பிப்பீர். நீரடைந்த வாழ்வே நல்வாழ்வு. செய்தபாக்கியமே சிலாக்கியம்.

**கோப.** என்ன! ஸ்ரீ இராமனையும் தாங்கள் கண்டீரா! (நமஸ்கரித்து எழுந்து) ஹா! கடவுளைக் கண்ணால் கண்டு தரிசித்த கர்த்தரே! நீரன்றோ பாக்கியவான். நீரன்றோ மகான் (நமஸ்கரித்து) அப்பெருமான்கள், ஸ்ரீ இராம இலக்ஷ்மணப் பிரபுக்கள், என்னிடம் வந்து, இவ்விலங்கைக் கழற்றி, இந்த இரசீதை அளித்தாரே ஒழிய, பாபியாகிய என் கண் முன்பு தோன்றவில்லையே. நேத்திரத்தால் பார்த்து அவர் திருச்சேவைக்குப் பாத்திரராகிய தாமன்றோ உத்தமமான பக்தர்.

**தானே.** இரசீது உம்மிடமாவந்தது! அதைக்கொடும் பார்ப்போம். (வாங்கிப் பார்த்து விட்டு) ஐயோ! தாம்பூல உச்சிஷ்டத்தினுல், கையெழுத்திடப்பட்ட, இக்கடிதத்தை என் ஐயன், எப்படி மனமுவந்து உம்மிடம் எடுத்து வந்தனரோ? ஸ்ரீ இராமதாஸரே! ஸ்ரீ இராமன் உமக்காக இவ்வளவு கஷ்டப்பட்டு, எனக்கும் தரிசனைதந்து, உமது பக்தியை, யாவர்க்கும் வெளிப்படுத்தி, உம்மை ஓர் ஸித்தர் ஆக்கிவிட்டனர். ஆதலின், நீர் முக்திக்கு ஓர் வழிகாட்டியானீர்.

**கோப.** பிரபு! என்னைப்புகழவேண்டாம். நான் தங்களைப் போல் அவ்வளவு புண்ணியம் செய்தவன் அல்ல. நீரோ எம் பெருமான் வந்த காலத்து அவரை உபசாரணைசெய்து வணங்கிப் போற்றினீர். உத்தமரே! ஸ்ரீ இராமனுக்கு எவ்விதமான உபசரணை செய்தீர் என்பதைத் தயைசெய்து சொல்லவேண்டும்.

**தானே.** ஸ்ரீஇராமதாஸரே! அவர்களை அமரும்படி நான்எவ்வளவோ வேண்டியும், என் வார்த்தைகளை நிராகரித்தும், என்னை ஏமாற்றி மயக்குவித்தும் மறைந்து விட்டனர். பக்தரே! வீணுக என்னைச் சோதனை செய்யவேண்டாம். அப்பெருமான் இருப்பிடத்தை நீர் அறிவீர் என்பதை, உமது பக்தியின் சக்தியே எனக்கு நன்கு தெரிவிக்கின்றது. என்மேல் கிருபை வைத்து முக்தனுகிய நீர் முக்தியின் வழியினைக் காட்டவேண்டும். அதற்குப் பிரதிபலனுக, நான் எதை வேண்டுமானுலும் உமக்குக் கொடுக்கச் சித்தமாக இருக்கின்றேன்.

**கோப.** பிரபூ! சுற்றத்தார் வேண்டேன். ஊர்வேண்டேன். பொருள்வேண்டேன். இவைகள் யாவும் அரசனுகிய தமக்கன்றோ வேண்டும்! எனக்கு வேண்டுவது ஸ்ரீ இராமனின் திருவடியே. அதையே யான் பெறவேண்டுகின்றேன். அதையே நான் தேடுகின்றேன். என்மேல் தயைசெய்து, ஸ்ரீ இராம தரிசனம் செய்த தாங்கள் அது எனக்கும் கிட்டுமாறு செய்விக்கவேண்டும்.

**தானே.** பிரியரே! வீணுக முகஸ்துதி செய்து, என்னை விசனக்கடலில் தள்ளலாகாது. ஆ! உம்மைப் பார்க்கப் பார்க்க என்மனம், தவிக்கின்றது—நண்பர்களே! ஆனந்தம் என்று நாம் கூறுகின்ருேமே! ஸ்ரீ இராமதாஸர், கடவுள் மீதுகொண்டுள்ள **பக்தியே பரமானந்தம்.** இதைத்தவிர, வேறு ஆனந்தமும் உண்டோ? இல்லே. இல்லே. மதிமிகும் அந்தணரே! என்னைச் சோதனை

செய்தது போதும். தயைசெய்து நான் கொடுப்பதை ஸ்ரீ இராமன் பொருட்டு ஏற்றுக்கொள்ளவேண்டும். பத்திராஜலத்தை உமது இராமச்சந்திருக்கே அளித்தேன். இதை என் பின் சந்ததியார்கள் அறியும் பொருட்டு இன்றே ஸ்ரீ இராமனுக்கு அவ்வூரைச் சாஸனம் செய்கின்றேன். நம் பொருட்டு ஸ்ரீ இராமன் ஈந்தபொருளை உமக்கே அளித்தேன். இதனையும், பத்திராஜல தாலூக்காவில் இனி வசூல் ஆகின்ற கிஸ்திப்பணத்தையும், எடுத்து நீர் உமது இஷ்டப்படி செலவழிக்க, உமக்கு அதிகாரமும் கொடுக்கின்றேன். நீர் மறுபடியும் இத் தாசில் உத்தியோகத்தை வஹித்துக்கொண்டு ஸ்ரீ இராமபிரானுக்குத் தொண்டு செய்து கொண்டு என்னையும் அடிக்கடி சந்தோஷப்படுத்திக் கொண்டு இருக்கும்படி மிகவும் வேண்டிக்கொள்கின்றேன்.

**கோப.** பிரபோ! எனக்கு இவைகள் ஒன்றும் வேண்டாம். என்னை என் இஷ்டப்படிபோக விடைகொடுங்கள். ஹே! பத்திராஜலவாசா! உம்மைப் பார்க்காத கண்கள் புண்கள் அன்றோ. நீர் எனக்கு மாத்திரம் வஞ்சனை செய்தீரே! உம்மைப்பார்க்க நான் எவ்வளவோ வேண்டியும் என் மீது உமக்கு இரக்கமில்லையா. (தானேஷாவின் காலில் வீழ்ந்து) ஓ மகானுபாவா! நீரன்றோ பக்தர்—தயைசெய்து ஸ்ரீ இராமனைக் காண்பியும். இல்லையேல், என்னை உமது கரங்களால் கொன்றுவிடும். (காலில் வீழ்கின்றார். தானேஷா திடுக்கிட்டு அவர் வீழாவண்ணம்தடுக்கிறார். உடனே சிறையில் !இலக்ஷ்மண சமேதராய் ஸ்ரீஇராமர் தோன்ற யாவரும் வணங்குதல்)

**இரா.** தானேஷா! வருந்தாதீர்! ஏ இராமதாஸ்! எழுந்திரும்! உமது பக்திக்கு மெச்சினோம். அதிசீக்கிரம் நாம் உம்மை வைகுண்டத்திற்கு அழைத்துக் கொள்ளுகிறோம். அது வரையில் பக்திமானுன தானேஷா அளித்த பொருளைக் கொண்டு, நீர் பத்திராஜலத்தில், நம்மை வணங்குவீர். தானேஷா! நீர் மகா பக்திமானுனபடியால், மிகக்கீர்த்தியுடன் இவ்விராஜ்யத்தை அரசாண்டு பின்னர், முக்தியடைவீர். (மறைதல்)

**கோப.** தன்யன். தன்யனுனேன்.

**தானே.** ஓ இராம்சிங்! ஓ இலக்ஷ்மண்சிங்! நில்லும். (சிறையின் உள்ளே ஓடுகிறார்) ஓ! சலேகயே! ஸ்ரீ இராமதாஸரே! நீரே பரமபக்தன். உம்மை நேசிக்காமல், நான் இது நாள் பரியந்தம் உமக்குப் பல இடையூறுகளை விளைவித்தேனே. இவ்

வீரேழுபுவனங்களிலும், உம்மைப் போன்ற ஸித்தரும் உளரோ? உம்மாலன்றோ நான் புனிதமடைந்தேன். அக்கன்ன! இவரை உடனே பத்திராஜலம் அனுப்ப ஏற்பாடு செய்யும்.

**அக்க.** உத்திரவு. ஷாஹின்ஷா! (கோபன்னவின் காலில் விழுந்து) பிரபோ! எங்கள் அறிவீனத்திற்காக, எங்களை மன்னிக்க வேண்டும். (மாதன்னவும் வணங்குதல்)

**கோப.** (அவர்களை வணங்கி) தாங்களன்றோ என்னை மன்னிக்கவேண்டும். உம்மாலன்றோ, ஸ்ரீ இராமனருள் கிடைத்தது.

**தானே.** வஜீர்! சீக்கிரம் பல்லக்குக்கு ஏற்பாடு செய்யும். பக்தரே! வாருங்கள் நாம் அரண்மனைக்குச் செல்வோம். [யாவரும் செல்லல்]

காக்ஷி முடிகிறது.

## அங்கம். 5. காக்ஷி. 4.

இடம். ஐதராபாத்தின் ஓர் தெரு. காலம். காலை.

[ வரிசைக்கிரமமாக வீரர்கள் உருவிய கத்திகளுடன் முன் செல்ல, அதற்குப்பின் வாத்தியங்கள் முழங்க, நாட்டியப் பெண்கள் செல்ல, நான்கு போயிகள் கோபன்னவை இருபக்கங்களிலும், வெண்சாமரைகள் வீசப்பட்ட, ஓர் அழகிய பல்லக்கில் வைத்துத் தூக்கிச் செல்லுகின்றனர். பல்லக்கின் பக்கத்தில் தானேஷா வணங்கிய வண்ணம் வர, கோபன்னவும் கரங்குவித்தவண்ணம், செல்கின்றார். சிறிது தூரஞ் சென்ற பின் தானேஷா, கோபன்னவை வணங்கி வருத்தத்துடன் விடைபெற்றுச் செல்கின்றார்.)

காக்ஷி முடிகிறது.

## அங்கம் 5. காக்ஷி 5.

இடம். பத்திராஜலத்தில் கோபன்னவின் பூஜாக்கிரகம்.

காலம். முற்பகல்.

( வருத்தமுற்ற முகத்துடன் சரஸ்வதி, கற்பூரத்தைக் கொளுத்தி வைத்துக் கரங்குவித்து நிற்கின்றாள். சுந்தரம் எழுந்து கடவுளை வணங்கி நிற்கின்றான்.]

**சரஸ்.** ஹே! இரகுநந்தனா! இனி யான் ஸுமனந்தாளேன். பிராணநாதர் சென்று பல நாட்களாகியும், இன்னும் திரும்பி வராததின் காரணம் தெரியவில்லை. ஆகையால் நான் என் மைந்தனுடன் இன்று ஐதராபாத்திற்குச் சென்று, என் காதலரை விடுவிக்கும்படி தானேஷாவை வேண்டுவேன். ஒருக்கால் என் பிராணநாதர் உயிருக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்திருந்தால், இப் பாலகனைத்தானேஷாவிடம் ஒப்புவித்து யானும் தீயிற்புகுவேன். இதுசத்யம். [நமஸ்கரித்து விட்டு] குழந்தாய்! புறப்படு, நாம் ஐதராபாத்திற்குச் செல்லலாம். (புறப்பட, கோபன்னா, மந்திரி பிரதானிகள் சூழப் பிரவேசித்தல்)

**கோப.** ஆ! சுந்தாம்.! (தழுவிக்கொள்ளல்.)

**சரஸ்.** (நமஸ்கரித்து) பிராணேசா! நல்ல! சமயத்தில் வந்தீர். உங்களை மீளவும் காண நான் என்ன புண்யம், செய்தேனோ! தானேஷா தங்களை மன்னித்தனரா?

**கோப.** என்னை மன்னித்தனர். முதலில் என்னைக் காப்பாற்றிய ஸ்ரீ இராமனை வணங்குகின்றேன். (கற்பூரத்தைக் கொளுத்திக் காட்டுகிறார்)

**அசரீரி.** ஹே! இராமதாஸரே! உமது ஜீவிய சரித்திரம் உத்தமமானது. ஆதலின், இதைக்கேட்போரும், படிப்போரும் பிரபலப்படுத்துவோரும், ஸ்ரீஇராமனின் அன்பைப் பெறுவார்களாக.

**கோப.** எல்லாம் நினது திருவருள். ஸ்ரீ ஜானகி காந்தஸ்மரணே—ஜய ஜய இராம்! ஸீதா இலக்ஷ்மண பரதசத்ருக்கன அநுமத்ஸமேத ஸ்ரீ இராமச்சந்திர மூர்த்திக்கு—ஜய.

 இரகுபதி இராகவ இராஜா இராம்
பதித பாவன ஸீதாராம்.

[காக்ஷி முடிகின்றது.]

**"போங்கும் மங்களம் எங்கும் தங்குக."**

[முற்றிற்று]

---

'பூர்ணனந்தா' அச்சுக்கூடம் தெற்குவீதி, தஞ்சாவூர்.

**The Hindu, wednesday, 6th February 1929.**

**Extraact from the Educational supplement.**

RAJASEKHARA or the Three Mysterious outlaws.

Mr. Viswanathan has written this neat litle play at the request of Sri Kumara Gana Sabha (the dramatic section of the Young Men's Literary Association Tanjore) who have staged it with success. In a prefatory note, Rao Bahadur P. Sambanda Mudaliar welcomes the author to the field of Tamil dramatic literature and points out that the Author commands a simple unpedantic yet dignified style in Tamil and that the characters are pretty well drawn. We can add that the author has kept in view the exigencies of the modern stage and that the play is consequently eminently stageworthy. * * The plot also is interesting and well laid out. * * The story is modernised in the narration and the story interest is sustained throughout the play. Price As. 8.

VEERASIMHAN

This is another play by the author of "Rajasekhara" In this play also intrigues for the throne abound. * * Complications are well presented and the denouement is skilfully done. This play also has been staged with success by the Young Men's Literary Association, Tanjore and it is eminently fitted for matine performances by amateurs and professionals alike Price. 8 As.

Title page only Printed at The "Vasan"

## By the same Author.

*Rajasekara or The Three Mysterious Outlaws*

with a foreword by Rao Bahadur,
P. Sambanda Mudaliar Avl, B. A., B. L.

It is a most interesting and sensational Tamil drama suited to the Modern Stage. The plot contains many astounding incidents with thrilling scenes introducing many characters in their adventurous, tragic, detective Comic and villainous acts. *Price 8 As. per Copy.*

*Veerasimhan or The Secret of True Love*

A thrilling Tamil Drama of love, adventure, treachery and chivalry. The play had been already staged by the members of Y. M. L. A. (Sri Kumara Gana Sabha Tanjore)

## Books to be Published Shortly.

சகுந்தராஜன் அல்லது ஸ்ரீ இராம மாருதி யுத்த

A Devotional Tamil drama full of intrigues, thrills and comics. Characters that apper in this play:--Narada, Viswamitra, Rama, Siva, Anjaneya etc.

அப்பூதி அடிகள்.

Another Religious Tamil Drama taken from Peria-Puranam. A Very suitable play for a two and a half hours performance. The play had been already staged by the Pupil Teachers of Govt. Traing School Tanjore.

சகுந்தலா அல்லது காதல் வெற்றி.

By.

**R. Sivaramakrishnan B. A. & V. Seshadri.**

A Tamil Drama written in a beautiful style with attractive songs. Very useful for Amateurs and schools.
(Approved by the Text Book Committee)
*Price As. 8 per Copy.*

☞ **For Copies apply to The Author.**